# ஜனாபிமானி வாசகம்

## மூன்றும் புஸ்தகம்




அன்னபூரணி தேவசகாயம்

எழுதியது



சென்னை:

ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்

1932




[விலை 4 அணா




# முகவுரை

---

இந்தப் புஸ்தகத்தில் சிறுவர்களுடைய வயதுக்கும் அனுபவத்திற்கும் எட்டக் கூடிய விஷயங்களைக் கதை ரூபமாயும் சம்பாஷணை ரூபமாயும் அவர்களுக்குப் புகட்ட முயன்றிருக்கிறேன்.

இதில் அடங்கியுள்ள காலை வணக்கம், தேனீ, மின்மினிப் பூச்சி, காக்காய்க்குக் கலியாணம் என்ற இனிய பாடல்களைக் கொடுத்த ஆர் ராஜ சூடாமணியவர்களுக்கு என் மனமார்ந்த வந்தன மளிக்கிறேன்.

அ. தேவசகாயம்.

# பொருள் அடக்கம்



# ஜனாபிமானி வாசகம்

## (மூன்றும் புத்தகம்)

---

### I. காலை வணக்கம்

1. காலை எழுந்தோம் களிப்போடு,
 கண்டோம் புதிய நாள்தன்னை.
காலை சூர்யன் ஒளியாக
 கதிரை வீசி எழுந்தானே.
சோலை தோறும் காகங்கள்
 சொல்லும் உமது கதையெல்லாம்.
காலை நாங்கள் அன்போடு
 கருத்தாய்ப் புகழ்வோம் உம்பேரே.

2. வேலை செய்யும் வேளையிலும்
 வேண்டும் பாடம் படிக்கையிலும்,
மாலைவிளை யாடும் போதும்
 பால ரோடு தங்கிடுமே.

சோலை மலர்போல் நாளெல்லாம்
சோதி முகமே காட்டிடுவோம்.
காலை மாலை எப்போதும்
கருத்தாய் தங்கும் எம்முடனே.

3. தந்தை தாயார் உடன்பிறந்தார்
தமது மனத்தை மகிழ்விப்போம்.
சிந்தை யோடு பாடங்கள்
சிறப்பாய் படித்து முடிப்போமே.
சொந்த நாதர் நீரின்று
சொல்லும் வார்த்தை கேட்போமே.
இந்த நாளில் எம்முடனே
இருந்து நடத்தும் இரட்சகரே.



## 2. எங்கள் தோட்டம்

கடந்த வருஷம் தை மாதம் ஒருநாள் நானும் என் தம்பி ராஜுவும், கண்ணனும் எங்கள் தோட்டத்தில் விளையாடப் போனோம். அப்பாவும் அம்மாளும் கூலி ஆட்களும் வயலில் நெல் அறுத்தார்கள். எனக்கும் நெல் அறுக்கப் பிரியம். ஆனால் எங்கள் மூன்று பேரையும் விளையாட அனுப்பிவிட்டார்கள்.

நாங்கள் முதலாவது கன்றுக்குட்டிக்காகக் கொஞ்சம் அறுகம் புல் அறுத்துக் கூடை நிறையப் போட்டோம். அதன் பிறகு கார்க் பூவினுல் மாலை கட்டி மூன்றுபேரும் போட்டுக் கொண்டோம். மறுபடியும் கார்க்பூவும் மாதுளம் பூவும் ரோஜா மலரும் கலந்து இரண்டு பெரிய மாலை தொடுத்துக்கொண்டு போய் அப்பா கழுத்தில் ஒன்றும், அம்மா கழுத்தில் ஒன்றும் போட்டோம். எல்லாரும் சந்தோஷப் பட்டார்கள். அம்மா கண்ணில் நீர் ததும்பி னது. ஒன்றும் சொல்லாமல் முத்தம் கொடுத் தாள். அப்பா மாலையைக் கண்ணில் ஒத்திக் கொண்டார். நிழலில் விளையாடுங்கள் என்று இரண்டுபேரும் சொன்னுர்கள்.

எல்லாரும் வேலையில் கருத்தாயிருந்த சம யம் கண்டு நாங்கள் குளத்திற்குப் போனேம். ராஜிக்கு நீந்தத் தெரியும். “வேதவல்லி, நான் வேஷ்டி துவைக்கப் போகிறேன்” என்று சொல்லிக்கொண்டே ஜலத்தில் பாய்ந்து விட் டான். நீந்திக் கொண்டே வெகுதூரம் போனுன். தாமரையைக் கடந்து அப்பால் போனுன். அடே தம்பி, வெகுதூரம் போகாதே என்று கத்தினேன். அவனே அந்தக் குளத் தின் மீன்களில் ஒன்றைப் போலவே நடந்து கொண்டான். சற்று நேரம் தலையை மேலே

தூக்குவான். பின்பு தண்ணீரில் மறைத்துக் கொள்வான். நேரே நீந்துவான் ; பிறகு மல் லாந்து நீந்துவான். எனக்குப் பயம் அதிகம். சிரிப்பும் அழுகையும் கலந்து வந்தது. ஆசை தீர விளையாடி முடித்துக் கரைக்கு வந்தான்.

இதற்குள் வெயில் ஏறிற்று. பெரிய மரங் களைத் தேடி ஓடினோம். ராஜு ஒரு உயர்ந்த மாமரத்தில் ஏறினான். "தம்பீ, அடே, நீ விழுந்து விட்டால் என்ன செய்கிறது. கீழே விளையாடலாம் வா," என்றேன். "அக்கா



இங்கே எவ்வளவு சுகமாய் இருக்கிறது! நமது வீடு, பள்ளிக்கூடம், கோயில் எல்லாம் தெரி கிறது", என்றான். ஒரு பெரிய மாங்காய் பறித்துக் கடிக்க ஆரம்பித்தான். "உனக்கும்

காய் வேண்டுமோ ?” என்றான். நான் வீடுகட்டி மண்ணைக் குழைத்து அதிரசம் சுட்டேன். வெண் பொங்கல், பாயசம், மைசூர்பாகு, சிலேபி, காராபூந்தி, தயிர்வடை ஆகிய பதார்த் தங்கள் எல்லாம் சமைத்தேன்.

நடுப்பகல் ஆனதும் கொட்டகைக்குச் சாப்பிடப் போனேன். ராஜு இல்லை. ராஜு ராஜு என்று அப்பா உரக்கக் கூவினார். அவன் வரவில்லை. வேலை ஆட்கள் நான் காணவில்லை. நீ காணவில்லை என்று பேச ஆரம்பித்தார்கள். மாட்டுக்கார மாரிமுத்தும், ஆட்டுக்கார அள கப்பனும், அவனைத் தேடி இங்கும் அங்கும் ஓடிச் சாடினார்கள். ராஜுவைக் காணவில்லை. அம்மை அழ ஆரம்பித்துக்கொண்டாள். அப் பாவுக்குக்கூட பயம்தான். “பையன் துடுக்க ளுச்சுதே; கிணற்றில் விழுந்தானோ, குளத்தில் இறங்கினானோ” என்று சொல்லி, முகத்தில் பெருகி வழிந்தோடின வேர்வையைத் தமது மேல்துண்டால் துடைத்துக்கொண்டு நின்றார்.

ராஜு மரத்தில் இருந்தபடியே தூங்கி விழித்து இறங்கி, “பசிப்பிணிக்கு மருந்து உண்டோ” என்று சொல்லிக்கொண்டே வந் தான். எல்லாரும் கைதட்டிச் சிரித்தார்கள்.



# 3. பூனைக்குக் குழிதோண்டின எலிகள் கதை

எல்லம்மாள் ஒரு பெரிய பூனை வளர்க்கிருள். அதன் பெயர் கமலவதனி. எல்லம்மாளும் கமலவதனியும் நல்ல சிநேகிதர்கள். ஒரே படுக்கையில் தூங்குவார்கள். என்றுலும் கமலவதனியிடம் நல்லொழுக்கம் இல்லை. பேச்சுமட்டும் 'மியா, மியா' என்று வெகு சாது வாய்ப் பேசும்.

கமலவதனிக்குப் பச்சைக் கண்களும், சப்பை மூக்கும் உண்டு. கன்னம் கால் அணுப் பணியாரம்போல் இருக்கும். உடல் மெத் தென்று மிருதுவான ரோமம் மூடியது. நீண்ட வாலை உயர்த்திப் புலிவேஷக்காரன் மாதிரி நடக்கும். பார்த்தவர் எவரும் பரமசாது என்று சொல்லுவார்கள்.

சமையல்கார முத்துசாமியையும், சந்து பொந்துகளில் ஜீவிக்கும் எலிகளையும் கேட்டால் உள்ள சங்கதி வெளியாகும். பால், வெண்ணெய் வைத்துவிட்டு ஐந்து நிமிஷம் மறந்து விட்டாலும் போதும். யார் கமலவதனிக்கு அதைத் தெரிவிப்பாரோ அறியேன். பதிவிருந்து பக்குவமாய்ச் சாப்பிட்டுவிட்டு, நாவால் முகத்தை நக்கிச் சுத்தம் செய்து, மெத்தைக் கட்டிலின்மேல் படுத்துக்கொள்ளும்.

எலிகள் திருநாள் பெருநாளில்கூட வெளியே உலாவ ஆசையில்லை. ஒருநாள் எலிகள் கூடிப் பூனையின் துர் எண்ணத்தைப் பற்றி பேசிக்கொண்டன. அநுபோகசாலிகள் பெரிய பிரசங்கங்கள் செய்தன. அதன் பிறகு ஒரு ஏமாந்த குட்டிகூடக் கமலவதனி கையில் சிக்கவில்லை. கமலவதனி எத்தனை நாளுக்கு ஒரு சந்திச் சாப்பாடு உண்ணும்! கமலவதனி செத்த பிணம்போல் நீட்டி நிமிர்ந்து படுத்துக்கொண்டது.

மியா, மியா, என்கிற பாட்டுச் சத்தம்கேட்கவில்லை. எலிகள் ஒவ்வொன்றாய் எட்டிப் பார்த்தன. "கமலவதனி செத்துக் கிடக்கிறது, பாவம்! வெகுநாள் கிழவி. இந்த வீட்டம்மாள் நம்மைக் கண்டால் விரட்டுவாள். ஆனால் கமலவதனிக்குத் தான் எது சாப்பிட்டாலும் கொடுப்பாள்" என்று ஒரு எலி சொன்னது. "ஏன் அத்தனை வஞ்சனை" என்று அடுத்த எலி சொன்னது. "பாவம், கமலவதனி செத்துப் போனாள்" என்று ஒரு எலி காதை ஆட்டிக் கொண்டே சொன்னது.

எலிகள் எல்லாம் ஒன்றுகூடி, அன்று ஒருவரும் வேலைக்குப் போகக் கூடாது, வளை தோண்டக் கூடாது என்று தீர்மானம் பண்ணிக் கொண்டது என்ன அதிசயம்! யார் யார் பூனைக்

காக அழுவது என்றும், யார் யார் குழி தோண்டுவது என்றும் ஏற்பாடாயிற்று. பூனைக்கு நோகாமல் வாலையும் மீசையையும் பிடித்து இழுத்துக் கொண்டுபோய் தோட்டத்தில் போடலாம் என்பதாய் ஒரு எலி சொன்னது.

ஆனால் கீச் கீச் என்ற கூச்சல் கேட்டதே ஒழிய வேலை ஒன்றும் நடக்கவில்லை. தூக்கு தூக்கு என்று சொல்லி எல்லா எலிகளும் நெருங்காமல் தூரத்தில் நின்று கொண்டன. இவைகளைக் கவனித்து கமலவதனி சிரிப்பை அடக்க முடியாமல் சட்டென்று எழுந்துகொண்டது. கண்திறந்து மூடுவதற்குள் அங்கே ஒரு எலியாவது நிற்காமல் ஓடிவிட்டன.

"பாவிக்குச் சாவு தூரம்."



## 4. குதிரையும் நாயும் - I

அயோத்திப் பட்டணம் என்ற ஊரில் ஒரு ஜமீன்தார் இருந்தார். அவரிடம் நான்கு குதிரையும் சில வேட்டை நாய்களும் இருந்தன. அயோத்திப் பட்டணம் ஒரு மலையடிவாரத்தில் இருக்கிறது. ஜமீன்தாருடைய குதிரைகளில் சிறந்தது ஜெயசீலன். நாய்களில் பெயர்பெற்ற சூரபதுமனும், ஜெயசீலனும் சிநேகிதர்கள்.

ஜமீன்தார் வீட்டில் சூரபதுமனுக்குச் சுயா தீனம் அதிகம். வீட்டில் உள்ள யாவரும் அதன்மேல் பிரியமாய் இருப்பார்கள். இரவில் திருடன் அணுகாதபடி அரண்மனையைப் பாது காக்கும். அதனால் குதிரைலாயம் மாட்டுக் கொட்டாய் கோழிக்கூண்டு புறுக்கூண்டு முத லிய பல இடங்களிலும் உலாவித் திரியும்.

குழந்தைகள் மாலை நேரம் உலாவப் போனால் சூரபதுமன் அவர்களோடு போகும். அவர்கள் சாப்பிட உட்கார்ந்தால் வாலை ஆட் டிக்கொண்டு எதிரில் உட்கார்ந்திருக்கும். அவர் கள் விளையாடும்போது தானும் கால் சலிக்க இங்கும் அங்கும் ஓடும். ஜமீன்தார் வெளியே எங்காவது போய்த் திரும்பி வந்தால் அவரை மோட்டாரிலிருந்து இறங்க விடாது. தரை யைப் பிருண்டி வாலை ஆட்டிக் கும்பிடு போட்டு மேலே கால் தூக்கிப் போடும். அவர் மெதுவாய் அதன் தலையைத் தடவுவார்.

சூரபதுமன் சில வேளைகளில் குதிரை லாயத்துக்குப்போய் ஜெயசீலனோடு உறவாடும். இருவருக்கும் அந்தரங்க சிநேகம் உண்டு. அவை ஒருநாள் பேசிக்கொண்டதாவது :

**ஜெயசீலன்** — வாரும் ஐயா சுகமா ?

**சூரபதுமன்** — என்ன சுகம் அண்ணா ? ஊரில் ஜமீன்தார் இல்லை ?

ஜெய—பையனுக்கு ஒன்றும் சரியாய் கிடைக்க வில்லை போலும். ஆஹா!

சூர — நீ என்றைக்கும் சாப்பிடுவது இந்த முரட்டுப்புல். நான் ஒரு வாய்கூட இதை உண்ணமாட்டேன். சீசீ, இதுவும்உணவா!

ஜெய — அப்பா, செல்வா, எட்டி நின்று பேசு. மாமிச நாற்றம் வீசுகிறது.

சூர — இதுவும் காலம்! கிடக்கட்டும். இந்தக் காய்ந்தபுல் உன் நாவையும் உதட்டையும் காயப்படுத்தாமல் எப்படிச் சாப்பிடுகிருய்?

ஜெய — இது எவ்வளவு ருசியான அறுகம் புல்! கவனமின்றிப் பேசாதே. என் நாவு, பல், மேல்வாய், உதடு எல்லாம் சமர்த்த னுக்குத் தகுந்தபடி அமைந்திருக்கின்றன.

சூர — சரி, சீலா, உன்பல் ஏன் இவ்வளவு பெரிது?

ஜெய — யோசித்துப்பார்.

சூர — எவ்வளவு புல்தின்கிருய்! ஒரு கட்டுப் புல்லும் ஒரு படி கொள்ளுப் பயறும் ஒரு நாளில் முடித்து விடுகிருய். என்னைப் போல் கொஞ்சமாய்ச் சாப்பிடு. சாப்பாட் டின்மேல் உனக்கு எவ்வளவு ஆசை!

ஜெய — அடே, நீ தின்கிற மாம்சம், சாதம், பால் எல்லாம் சரீரத்தை வளர்க்கும் சத்து

நிறைந்தவைகள். நான் சாப்பிடுகிற புல் அப்படிப் பட்டதல்ல. நான் உன்னைப் போல் உலாவிக்கொண்டு திரிகிறேனா? நான் பெரிய வேலைக்காரன் அல்லவோ?

சூர — எதையும் சாப்பிடு. இன்னும் இரண்டு கட்டுப் புல் வேண்டுமானாலும் மாடன் உனக்குப் போடுவான். என்ன தப்பிதம் செய்தாய்? உன் காலில் இரும்பை வைத்து ஆணி அடிக்கிறார்கள். என் காலில் அப்படி ஆணி அடித்தால் ளொள் ளொள் என்று அழுவேன். நடக்க மாட்டேன்.

ஜெய — பைத்தியக்காரா, நீயும் நானும் ஒன்று தானா? உன்வேலை யென்ன, என் வேலை யென்ன? என் பாதங்கள் எவ்வளவு உறுதி பார். நான் எவ்வளவு பெருத்த சுமை யானாலும் எடுத்துக் கொண்டு மணிக்கு எட்டுமைல் சாதாரணமாய் ஓடவேண்டும். எனக்குச் செருப்பு மாட்டி வைக்கிறார்கள். இருப்புச் சட்டம்தான் என் செருப்பு.

இச்சமயம் கல்யாணி எலும்பும் அரிசியும் சேர்த்துச் சமைத்த ஆகாரம் கொண்டுவந்து நாயின் சட்டியில் போட்டான். சூரன் வாலை ஆட்டிக்கொண்டே அவசரமாய்ச் சாப்பிட்டது.





## 5. குதிரையும் நாயும் - II

ஒருநாள் சூரபதுமன் பக்கமாய்ப் போகக் கண்டு ஜெயசீலன் ஞ் ஙே ஏ ஏ ஏ, ஞ் ஙு உ உ உ, ஞ் ஙெ ஏ ஏ என்பதுபோல் அதைக் கூவி அழைத்தது. சூரன் ஒரே பாய்ச்சலாய் ஓடித் தன் சிநேகிதன் அண்டையில் நின்றது.

ஜெய — ஏது சந்தோஷமாய் இருக்கிறாய்?

சூர — தெரியாதா? இன்று வேட்டைக்குப் போவோம்.

ஜெய — நான் வரலாமா?

சூர — நீயும் வருவாய்.

ஜெய — எங்கே போவோம்?

சூர — மலைக்கு.

ஜேய — சந்தோஷம்.

சூர — மாடன் கொள்ளுப்பயறு கொண்டு வருகிருன்.

ஜேய — அடே உன் அழகு பல்லால் சாப்பிடு வதைப் பார்க்க விரும்புகிறேன்.

சூர — அது என்ன மாதிரி விருப்பம்? எனது முன் பற்கள் முல்லை அரும்புபோல் அழ காயும் சிறிய வைகளாயும் இருக்கின்றன. பக்கத்துக்கு ஒன்ருக இரண்டு பெரிதும் கூர்மையானதுமான பற்கள் இருப்பது மாமிசம் உண்ண வெகு சௌகர்யமாய் இருக்கிறது.

ஜேய — நீ நாய்களோடு சண்டை போடும் போது உனது அழகு பல்லைத் தெளிவாய்க் காட்டுகிருய். இவ்வளவு கஷ்டப்பட்டுச் சொல்லவேண்டியதே இல்லை.

சூர — கேலி பண்ணுதே.

ஜேய—நகமுள்ள உன்பாதம் உன்வேலை சோலி க்குமிக உதவிதான். மோப்பம் பிடிக்கவும், குழிக்குள் நுழைந்த முயலைப் பிடிக்கவும் தகுந்த மூக்கும் பாதமும் உனக்கு இருக் கிறது. நான் இல்லாவிட்டால் எஜமான் தமது தொந்திவயிற்றைச் சுமந்துகொண்டு எங்குமே போகமுடியாது. அவருக்காக

வேட்டை பிடிக்கிறவன் நீ. — அடே நீ குளித்து எத்தனை நாளாகிறது?

சூர — இப்போது ஒருமணி நேரத்திற்குமுன் வேலாயுதம் என்மேல் என்ன என்னமோ போட்டுத் தேய்த்தான். தொட்டிக்குள் விட்டு குழந்தை குளிப்பாட்டினமாதிரி குளிப்பாட்டினான்......

ஜேய — ஏன் இவ்வளவு அழுக்காயிருக்கிறாய்? மேல் எல்லாம் புழுதிபார்!

சூர — தொட்டிவிட்டு வெளியே வந்தவுடனே கீழே கிடந்து புரண்டேன்.

ஜேய — என்ன கெட்ட குணம்!

சூர — குளிர் பொறுக்க முடியாது.

நாய் அப்போது குழந்தைகள் வரக்கண்டு ஓடிப்போனது.

---

வினா:

1. நாயின் பல்லைப் பற்றிச சொல்லு.
2- குதிரையின் உணவு என்ன?
3. குதிரைக்கு ஏன் லாடம் அடிக்கிறார்கள்?
4. நாயின் பல்லை எப்போது பார்க்கலாம்?





# 6. ரஞ்சினியும் பச்சை வெட்டுக்கிளியும்

ஒருநாள் ரஞ்சினி பூந்தோட்டத்தில் புல் லின்மேல் படுத்து உருண்டுகொண்டே அய லில் இருந்த ஒரு ரோஜாச் செடியைக் கவனித் தாள். அன்று மழைநாள் ஆனதால் மெரினு என்னும் கம்பளி உடை தரித்திருந்தாள். ரஞ் சினி செடியில் ஒரு பச்சை வெட்டுக்கிளி இருப் பதைக் கண்டாள்.

ரஞ்சினி "இந்த வெட்டுக்கிளிக்கு இறக்கை இல்லையா? இலைகளால் தன்னை மூடிக்கொண்டு கிடக்கிறது" என்று சொன்னாள்.

வெட்டுக்கிளி அதைக் கேட்டு, அவள் சமீபமாய் வந்து உட்கார்ந்து, "அம்மணி! என்

இறக்கையைத் தயவுசெய்து சரியாய்ப் பாருங் கள்; அது அழகாய் இல்லேயா?" என்றது.

"உனக்கு மற்றப் பூச்சிகளேப்போல் ஏன் பல வருண இறக்கை இல்லே? பூச்சி ஜாதியில் பிறந்த நீ இப்படி இலேயை ஒட்டிக்கொண்டு திரிவது சரியோ?"

"நாஞ இலேயை ஒட்டிக்கொண்டு திரிகி றேன்?" என்று சொல்லி "கீங்ங்ங்......" என்று பெருஞ் சத்தம் பண்ணினது.

"வெட்டுக்கிளியே, கீங்ங் என்கிருயே அதன் அருத்தம் என்ன?"

"அநேக ஜனங்கள் தெரியாமல், பிறரைப் பழிக்கிருர்கள் என்று சொன்னேன்."

"மெய்தான் உன் இறக்கைகள் இலே அல்ல, ஏன் அப்படி ஒரே நிறத்தை உடுத்த வேண்டும்?"

"கண்மணி, உனக்குத்தான் பேராசை. சிவப்பு உடை போட்டிருந்தால் ஒரு நீல உடுப் புக் கேட்பாய்; அதுவும் கிடைத்த பின்பு, சிவப்பும் பச்சையும் கலந்த வருணம் வேண்டு மென்பாய்; வெள்ளேப்பட்டுக் கேட்பாய்; வெல் வெட் இல்லேயே என்பாய்; மனுஷர் என்னேப் போல் ஆகவேண்டும்."

"எவ்விதத்தில்?"

"உன் உடையைப் பார்! ஆட்டுரோமம்; பட்டுப்பூச்சி தன் மக்களுக்காக நூற்ற நூல்; பருத்திச் செடியிலுள்ள பஞ்சு; செடிகளின் நார்; எத்தனை விதமான பொருள் தேடி அலை கிறீர்கள்!"

"வெட்டுக்கிளியே, நான் உன்னை நிச்சய மாய் நேசிக்கிறேன். என்றாலும் நீ ஒரு பூச்சிதானே."

"பூச்சிதானே என்பதின் அர்த்தமென்ன?"

"உனக்குச் சிவந்த ரத்தம் இல்லை. முட் டை யிட்ட உடனே செத்துப் போவாய்."

"கண்மணி, யாரோ சொன்னதைச் சொல் லுகிறாய். நீயே கவனித்தால் ஞானம் அடைய லாம். உனக்கு எத்தனை கண்?"

"உனக்கு எண்ணத் தெரியாதா? இவ்வ ளவு அழகான கண் உனக்கு இருக்கிறதா?"

"அம்மைக்கு இருப்பது இரண்டு கண். வடக்கே பார்த்தால் தெற்கே வருவது தெரி யாது. கிழக்கே பார்த்தால் மேற்கே எந்த விரோதி வந்தாலும் தெரியாது. இதுதான் நல்லதோ?"

"நீ எப்படிப் பார்க்கிறாய்?"

"அணுதரிசி என்னும் பூதக்கண்ணுடி யால் பார். என் தலையெல்லாம் கண். ஒரே நேரத்தில் எட்டுத் திசையும் பார்ப்பேன்."

"ஆம், அது சமர்த்துதான். ஆகிலும் இத்தனை கண் என்னத்திற்கு? கண்ணுடி போடு வதா யிருந்தால் என்ன செய்வாய்?"

"ஒரு தடவையில் ஒரே கேள்வி கேட்பது நியாயம். எனக்குக் கண்ணுடி அநாவசியம். என் கழுத்தைத் திருப்பவே முடியாது. சத் துருக்களின் கைக்குத் தப்புவதற்காக எனக்குப் பல கண்கள் தலையில் நெருங்கி இருக்கின்றன. இலைமாதிரியே தோன்றும் இறக்கை இருப்ப தும் மோசக்காரப் பிராணிகளுக்குத் தப்பித்துக் கொள்ள உதவுகிறது. அது எனது மெல்லிய தேகத்திற்கு ஏற்ற பலமான உடை."

"இன்னும் ஒரு கேள்விமட்டும் கேட்கி றேன். உன் இரத்தம் என் குளிர்ந்திருக்கிறது?"

"நான் அதைப்பற்றி ஒருநாளும் யோசிக்க வில்லை. ஆனுல் அதனுல் நான் கஷ்டப்பட வில்லை.!"

"பொழுது சாயும் நேரம் இனிய கீதம் பாடுகிருயே, என்ன சாப்பிடுகிருய்?"

"என்ன சாப்பிடுகிறேன்! ஒருநாள் ஒரு கழுதையும் என்னிடத்தில் இதே கேள்வி

கேட்டது. நான் புல் சாப்பிடுகிறேன். சங்கீதம் பாடுவது என் கால்கள்தான். உன்னைப்போல் வாயால் பாடுவதை என் ஜாதியார் ஒப்புக் கொள்ளமாட்டார்.''

"வெட்டுக்கிளி, உன்னைவிட்டுப்போக என க்கு மனதில்லை. இவ்வளவு நற்குணம் பொருந் திய உன்னை யாராவது விரோதிப்பார்களா?''

"பக்ஷிகள் என் குலத்தாரைச் சாப்பிட்டே வயிறு நிரப்புகின்றன. இந்த உலகத்தில் சமா தானம் ஏது? அதைச் சொல்லி என்னபயன். அம்மணி, நான் போகவேண்டும்.''

"போய் வா. நான் பக்ஷிகளிடம் கேட்கி றேன். காலால் பாட்டுப்பாட எனக்கு ஒருநாள் சொல்லிக்கொடு.''

"என் காலைப்போல் ரம்பம் மாதிரிக் கால் உனக்கும் இருந்தால் போதிக்கிறேன். இல்லா விட்டால், நீ எப்போதும்போல் நாவினுல் கடவுளை வாழ்த்து'' என்று சொல்லி வெட்டுக் கிளி ஒரே குதியில் போய்விட்டது.

## வினு

1. ரஞ்சினி வெட்டுக்கிளிமேல் சொன்ன குறை என்ன?
2. ரஞ்சினிமேல் வெட்டுக்கிளி கண்ட குறை என்ன?
3. நாம் அதனிடம் கற்கவேண்டிய பாடம் என்ன?





# 7. தேனீயும் சாரங்கபாணியும்-I

சில வருஷங்களுக்குமுன் கும்பகோணத்தில் சாரங்கபாணி என்று ஒரு பையன் இருந்தான். அவனுக்குப் பந்து விளையாடவும் குளத்திலும் ஆற்றிலும் பந்தயம் போட்டு நீந்தவும் பிரியம். தாயார், "அடே தம்பி, இந்தக் கத்தரிக்காய்க் கூடையைப் பெரிய தெரு வரையில் என்னேடு எடுத்துவா, நான் பெரிய கூடையை எடுத்துக் கொள்ளுகிறேன், அப்பன் அல்ல" என்ருலும் சாரங்கபாணி கண்ணைக் கசக்குவான். அவள் அவசரமாய் ஒரு வேலையைப் பார்க்கத் திரும்பினல் போதும். சாரங்கபாணி மாயமாய்ப் போய்விடுவான். தாயார் "இந்தப் பையனுக்கு செட்டைகள் தான் இருக்குமோ" என்று சொல்லிக் கொள்ளுவாள்.

ஒருநாள் காலை 9-மணிக்குக் காவேரி ஆற்றங்கரையில் இருந்த ஒரு இலுப்பை மரத்தின் பெரிய கிளைகள் ஒன்றில் உட்கார்ந்து கொட்டாவி இட்டுக்கொண்டிருந்தான். அன்று பாடசாலையில் ஆறுமாதப் பரீக்ஷை நடந்தது. வீட்டில் எல்லாரும் மிளகாய் பறிக்கத் தோட்டத்துக்குப் போய் விட்டார்கள்.

பாவம், பையன் என்ன செய்வான். அவனுடைய புஸ்தகம், மைப்பெட்டி, காகிதம் எல்லாம் மரத்தடியில் கிடக்கிறது. மரத்தின் உச்சியில் தேன் கூடு ஒன்று தொங்குவதைக் கவனித்தான். "தேன்கூடு பெரியது. அதிகத்தேன் இருக்கலாம். இதை எடுத்து வீட்டுக்குக் கொண்டு போனால் அம்மை சந்தோஷப்படுவாள். அப்பா சந்தோஷப்படுவார்." என்று பலவாறு யோசித்தான்.

ஆஹா, எத்தனை தேனீ! என்னைக் கொட்டினால் என்ன செய்வேன்? எல்லாரும் கோபிப்பார்கள். அப்பா அடிப்பார். பையன்கள் கேலி பண்ணுவார்கள். வாத்தியாருக்கு இது ஒன்றேபோதும்.

இவ்வளவு யோசனை பண்ணியும் அவசரமாய் ஏறிக்கூட்டில் கைவைத்தான். கோவென்று கத்திக்கொண்டே கீழே இறங்கி விட்டான். காது, மூக்கு, உதடு, கை, கால், கன்னம் எல்லாம் தடித்து சற்றுநேரத்தில் வீங்கிப்போனது.

"இந்த தேனீக்கள் மகா துஷ்டர். நான் கூட்டைச் சரியாய் தொடக்கூட இல்லை. ஹா, என்ன வேதனை" என்று சொல்லி வருத்தப்பட்டுக் கொண்டான். அச்சமயம் ஒரு தேனீவந்து அவனிடம் சாந்தமாய்ப் பேசிற்று.

"என் ஐயா கண் சிவந்து, கன்னம் அதைத்திருக்கிறது?"

"போ, பூப்பூவாய் அலையப்போ"

"ஐயா, கோபமா?"

"இல்லையா?"

"என்?"

"என்னை நீ கொட்டவில்லையா?"

"அது தப்பிதமா?"

"இல்லையா?"

"உன் வீட்டில் திருடன் புகுந்தால் என்ன செய்வாய்."

"தகுந்தபடி சிக்ஷை செய்வேன். என் ஜாதியார் இனத்தார் எல்லாரும் கூடி அவனை நோக அடிப்பார்கள்."

"என் வீட்டில் திருடன் புகுந்தால்?"

"ஹே, ஹே, தேனீ அதிகம் பேசாதே."

"என்னத்தினால்?"

"நீயும் நானும் ஒன்ரு? சரிசமானமாய்ப் பேசுகிருயே!"

"என் கடமை அது ஐயா, வீட்டைப் பாதுகாக்க வேண்டாமா?"

"போ, நான் உன்னேடு பேசமாட்டேன்."

"என் சோலிக்கு வராதிருந்தால் உன்னிடத்தில் நான் எவ்வளவு மரியாதையாய் இருப்பேன் என்று என்னே சோதித்துப் பார்."

"நீ ஒன்றுக்கும் உதவாத தேனீ; நானே பிள்ளே,நீஎன்னிடத்தில் தாழ்மையாய்ப் பேசு."

நானு ஒன்றுக்கும் உதவாதவன்! ஐயா, உனக்கு வீடுகட்டத் தெரியுமா? சமையல் செய்யத் தெரியுமா? உன் வேஷ்டியை நெய்யத் தெரியுமா? மெழுகுவர்த்தி பண்ணுவாயா? சோப், கண்ணுடி ஏதாவது ஒருவேலே செய்யத் தெரியுமா?"

"தெரியாது."

"உன்னேடு பேசிக்கொண்டே எத்தனே பூவில் தேன் ரசமும் மகரந்தப் பொடியும் எடுத்தேன் பார்த்தாயா? யார் தாழ்மையாய்ப் பேசுவது நியாயம்?"

நிறுத்து. என்னே எல்லாரும் ஒன்று கூடிக் கொட்டினீர்களே! எனக்கு அது மறக்க முடியாது.

தேனீக்கு அளவுகடந்த சிரிப்பு வந்து விட்டது. குலுங்கக் குலுங்க நகைத்துக் கொண்டு "அப்பன் உங்கள் காலில் பட்டது என் கண்ணில் பட்டதுபோல். சமாதானம் பண்ணிக் கொள்ளுவோம்" என்றது.

"தேனீ, நீ ஓயாது வேலை செய்கிருய். எப்பொழுது விளையாடிச் சந்தோஷமாய் இருப்பாய்?"

"நல்ல வேலை செய்வதிலும் வேறு என்ன சந்தோஷம் உலகத்தில் இருக்கிறது!"

"மது உண்டு காலம் தள்ளுகிருய். இது தான் மகாவேலையோ?"

"இவ்வளவு பெரியவனுகியும் உனக்கு ஒரு காரியம் கூடத் திட்டமாய்த் தெரியாது. மலர் களில் தேன் செய்வதற்கான மதுர ரசம் உண்டு. அதைத் தேனுக்குவது என்வேலை. இரண் டாவது, நான் சேகரிக்கும் தேன் முழுவதை யும் நானே உண்பேனு?"

"வேறு என்ன செய்கிருய்! சீக்கிரம் சொல்லு"

"பூவில் இருப்பது ஓர் இனிய ரசம். நான் அதை எடுக்கும்போது மகரந்தப்பொடி என் காலில் ஒட்டிக்கொள்ளுகிறது. இந்த வஸ்துக் கள் என்னுடைய பிரயாசத்தினுல் தேனுகவும்,

வீடுகட்டத் தகுந்த தேன்மெழுகாகவும் மாறு தல் அடைகின்றன."

"நீயும் பகல் கொள்ளைக்காரன்!"

"அல்ல, நான் ஒரு உபகாரி?"

"எப்படி?"

"மகரந்தப்பொடி ஒருபூவிலிருந்துஅடுத்த பூவிற்குப் போவது எனது சகாயத்தால். அப் படிச் செய்யாவிட்டால் பூவிலிருந்து பிஞ்சு உண்டாகாது?"

"நிஜம்தானு?"

"முருங்கை மரம் சில காலங்களில் நிறை யப் பூத்தும் காய் விடாமல் பூ உதிர்ந்து போக எப்போதாவது கண்டாயா? வண்டுகளும் தேனீக்களும் ஏதாவது காரணத்தால் அங்கே போகாதிருந்தால் பூ இருந்தும் காய் இல்லா மல் போனது."

"தேனீ, நாளைக்கு உன் வீட்டைப் பற்றிச் சொல்லு. இப்போ நான் சாப்பிடப்போக வேண்டும். பரீக்ஷைக்குப் போகவேண்டும்."

"அமாவாசை தினத்தில் வேறு இடம் குடிபோவோம். நீ அதற்கு முந்தியே வந்து கேட்டால் சொல்லுகிறேன்."

சாரங்கபாணி வீடு போய்ச் சேர்ந்து சற்று நல்லவனுய் நடந்து கொண்டான்.

**வினு :**

1. சாரங்கபாணி ஏன் பாடசாலைக்குப் போகவில்லை ?
2. தேனீ எப்படித் தேன் செய்கிறது ?
3. அது பூவுக்கு என்ன உபகாரம் செய்கிறது ?



# 8. தேனீயும் சாரங்கபாணியும்–II

சாரங்கபாணி தன்னுடன் சம்பாஷித்த தேனீயை மறக்கவே இல்லை. ஒருநாள் பாட சாலை முடிந்தவுடனே இலுப்பை மரத்தின் அருகில் அதைக் காணலாம் என்ற ஆவலுடன் ஓடினுன். அவன் விரும்பினபடியே ஆற்ருே ரம் இருந்த வாழைத் தோட்டத்தில் அதைக் கண்டுபிடித்தான். தேனீ குளிர்ந்த முகத்துடன் அவனுடனே பேசினது.

“நீ குறித்த நேரத்தில் வந்துவிட்டாய். சந்தோஷம். மனிதர் பலர் சொன்னபடி நடப்பதில்லை.”

“உன் வீட்டைப்பற்றி அன்று நான் கேட்க வில்லை. அதற்காக அவசரமாய் வந்தேன்.”

“என்ன சொல்ல வேண்டும் ?”

“ஆறுசுவர் உள்ளதும் அநேக அறைகள் அடங்கியதுமான உன்வீடு எப்படிக் கட்டுகிருய்? யார் உனக்குச் சொல்லிக் கொடுத்தார் ?”

"அழகான வீடு கட்டுவது என் குலத்-துக்கு ஏற்பட்ட தொழில். சரீரத்தில் உள்ள செதில்களை எடுத்து சவைத்து மெதுவாக்கி அதைக்கொண்டு வீடு கட்டுகிறேன்."

"மகரந்தப் பொடியைக் கொண்டு போகிருயே அதை என்ன செய்கிருய்?"



"அதுதான் குழந்தைகளின் உணவு."

"உன் கூண்டில் நிறைந்து கிடக்கிற புழுவா குழந்தைகள்?"

"குழந்தைகளை அப்படித் தாழ்வாய் பேசாதே. நீகூட ஒருநாள் புழுமாதிரியே இருந்தாய்."

"கோபப்படாதே. தயவுசெய்து சொல்லு. உனக்குக் குழந்தைகள் உண்டா?"

"சூ, சூ, எங்கள் வீட்டில் ராணித் தாயார் ஒருத்திக்கு மாத்திரம் குழந்தைகள் உண்டு. அவள் மாத்திரம் முட்டை இடுவாள். வேறே ஒரு காரியமும் அவள் கவனிக்க வேண்டிய தில்லை. நாங்கள் எல்லாரும் பல வகுப்பான வேலையாட்கள். நாங்கள் ஒருக்காலும் ராணித் தாயாருக்கு முதுகுகாட்டி நடக்கமாட்டோம்."

"நான் உங்கள் இராணியைப் பார்க்க விரும் பினுல் எனக்கு அவளைக் காட்டுவாயா ?"

"இராணித் தாயார் எல்லா ஈக்களிலும் மிக வும் பெரியவள். இதுவே அவளுக்கு அடை யாளம். நாங்களே அவளுக்கு உணவு ஊட்டு வோம். எங்கள் வீட்டிலுள்ள ஒவ்வொரு அறைக்கும் அழைத்துக்கொண்டு போவோம்."

"வேலையாட்கள் என்ன காரியங்கள் பார்க் கிறீர்கள்."

"சிலர் என்னைப்போல் மது சேர்ப்பவர் கள். வேறு பலர் வீடு கட்டுவார்கள். இன்னும் ஒரு வகுப்பார் வீட்டைச் சுத்தம் செய்வார்கள். வேறு சில தேனீக்கள் குழந்தைகள் இருக்கும் அறைகளில் அனலும் குளிரும் அதிகமாகாத படி பாதுகாப்பார்கள்."

"நிஜம்தானு ?"

"இடையில் பேசாதே. யுத்தவீரரான தேனீ வகுப்பார் உண்டு. நீ அதை அறியாமல்

என்னைப் பிடித்துக்கொண்டாய். நான் ஒருவரையும் கொட்டுகிறதில்லை. சத்துருக்களுக்குத் தண்டனை விதிக்கிறவர்கள் அவர்களே."

"ஆஹா, நான் அன்று உன்னை வீணே கோபித்தேன். மன்னிப்புக் கேட்கிறேன். உங்கள் வீட்டை ஏன் சுத்தம் செய்ய வேண்டும் ?"

"குழந்தாய், இதை நீ அறிய முடியாதா ? எங்கள் வீடு ஒரு நகரத்துக்குச் சரி. 50000 அல்லது 60000 ஈ குடியிருக்கிறோம். பிறப்பு இறப்பு முதலான காரியங்கள் எவ்வளவு இருக்கும்! சுத்தம் செய்கிற வேலைக்காரர் எப்போதும் உழைப்பார்கள்."

"உங்கள் வீடு ஒருக்காலும் அசுத்தமாய் இராதா ?"

"இல்லை, ஒருக்காலும் இராது"

"உங்களுக்குள் சண்டை வராதா ?"

"அவரவர் வேலை செய்தால் சண்டை எப்படி வரும் ?"

"தினமும் மது சாப்பிடுகிறீர்களே. மதி மயக்கம் வராதா ?"

"உனது ஊராரிடம் அப்படிப்பட்ட வழக்கம் உண்டு. நாங்கள் மிதமான உணவு உண்டு

புத்தி தெளிந்து வேலை செய்கிறோம். போய் வருகிறேன்'' என்று சொல்லிப் போய்விட்டது.

சாரங்கபாணி இதன் பிறகு ஒழுங்குள்ள பிள்ளையாய் இருந்தான்.



## 9. தேனீ

பூவில் நிறையும் இன்தேனை
புகுந்து திருடும் கள்ளி நீ.
காவின் மரத்தில் தேன்கூட்டில்
களிக்கும் அரசி தன் மக்கள்
ஆவி மகிழ ஊட்டிடவே
அழகு மலரின் செந்தேனை
நாவில் நிறைத்துக் கொண்டாயே.
நலமோடிரைந்து சென்றாயே.
மலர்களெல்லாம் ஒன்றுகூடி
மலர் வாயைத் திறந்தெனக்கே
பலவகையாம் நற்கதைகள்
பாட்டாகப் பாடிடுமே.
மலர்மல்லி மணம்போலே
பலரோடும் நானிருப்பேன்.
பலர்முன்னே மணரோஜா
முகம்போலே மலர்ந்திருப்பேன்.



# 10. தோட்டமும் மண் கலசமும்

என் தகப்பனருக்கு ஒரு தோட்டம் உண்டு. அதில் அவர் பலவிதமான செடிகளும் நாட்டியிருக்கிருர். ஒரு பக்கம் மாதுளங்காடு; அதில் ஒவ்வொரு செடியிலும் பழம் நிறைந்து குலுங்கும். நாரத்தை, கிச்சிலி, தென்னே, ஆப்பிள், சீத்தா மரங்கள் தம்தம் ஜாதிவரிசையில் ஒழுங்காய் நிற்கின்றன. பலாமரங்கள் மட்டும் கண்டபடி இங்கே ஒன்று அங்கே ஒன்ருய் நிற்கும். மற்ருெரு பக்கம் புடலே அவரைக் கொடிகளுடன் திராக்ஷைக் கொடிகளுக்கும் பந்தல் ஏற்பட்டு இருக்கிறது.

பாலர் பாடசாலே மாதிரி புஷ்பப் பாத்திகள் வெகு சிறப்பாய் அமைந்து இருக்கின்றன. அங்கே உலாவித் திரிய சிறுபாதைகள் இருப்பதோடு, பாதையருகில் ஆசனங்களும் போட்டு இருக்கிறது.

ஒரு வருஷம் அதிக சிரமப்பட்டு குளம் ஒன்று வெட்டினேம். ஒருநாள் மாலே நேரத்தில் இளேப்பாறும்படி அப்பாவும் அம்மாளும் தோட்டத்தில் உலாவினர்கள். வெள்ளே, மஞ்சள், பட்டு (இருண்ட சிவப்பு) முதலிய பலவருண ரோஜா மலர்கள் ஆநந்தமாய் விரிந்தும், கரம் குவித்தும் நின்றன. பிச்சி,

லீலி மல்லிகை, முல்லை இருவாட்சி மலர்களின் வாசனை வீசியது. அப்போது வெயிற்காலம். பலவிதச் செடிகளும் சந்தோஷமாய் நிற்குந் தருணம் தோட்டத்தின் ஒரு மூலையில் ஒரு பெருமூச்சுத் தொனி கேட்டது.

“எனக்கு வெட்கமாயிருக்கிறது. நான் இங்கே கிடந்து ஒரு வேலையும் செய்கிறதில்லை. எஜமானுக்கு என்னால் ஒரு பிரயோஜனமும் இல்லை” என்கிற சத்தம் எனக்குக் கேட்டது.

அப்பா அந்தவழி வந்தவர் பார்த்தார். அங்கே நின்ற லீலிச் செடிகள் வாடிச்சாய்ந்து கிடந்தன. அவருக்கு மனதில் சங்கடமாய் இருந்தது. உடனே எனக்கு உத்தரவு பண்ணினர்.

‘ராஜா’

‘என்னப்பா’

‘லில்லிப்பாத்தியைப்பார்’

‘ஆம் அப்பா’

‘என்ன கவனித்தாய்.’

‘வாடிக் கிடக்கிறது.’

‘அப்புறம் ?’

‘தண்ணீர் இப்பொழுதே ஊற்றுகிறேன்.’

‘பாத்திரம் ?’

“அப்பா அதோ ஒரு நல்ல மண்பாண்டம் கிடக்கிறது” என்று சொல்லி ஓடிப்போய்

அதை எடுத்து வந்தேன். குளத்தில் ஜலம் மொண்டுவந்து லில்லிப் பாத்திக்கு ஊற்றினேன். சற்று நேரத்தில் சாய்ந்த செடிகள் நிமிர்ந்து விட்டன.

அப்பா, "இந்தக் கலசம் அவசரத்துக்கு உதவுகிறது. இதைப் பத்திரமாய்க் கவிழ்த்து வை" என்று சொல்லிப் போய்விட்டார்.

மண்கலசம் உள்ளத்தில் சிரித்துக்கொண்டது. அப்புறம் பெரு மூச்சு விடவில்லை.

---

**வினவும் வேலையும் :**

1. ஒரு நல்லதோட்டம் எப்படி இருக்கவேண்டும்?
2. மண்கலசம் என்ன சொன்னது ?
3. லில்லிச் செடிவரை !
4. மண்கலசம் ஒன்று களிமண்ணால் செய்.
5. தோட்டம் ஒன்று மணலில் செய்.
6. உன் தோட்டத்தைப் பற்றி எழுது.





## 11. ரெயில்வண்டி பிரயாணம்

இராமநாதபுரம் ஜில்லாவில் பெருநாளி என்று ஒரு கிராமம் இருக்கிறது. அது தென் இந்திய இருப்புப் பாதையிலிருந்து சுமார் 36 மைல் தூரத்திலுள்ளது. அதைச் சூழ்ந்து உள்ள பூமி அநேக மைல் தூரம் வரையில் கரிசல் நிலம். பருத்தி விளையும் பூமி. அவ்வூரார் பலர் வேறு இடங்களைப் பார்த்ததில்லை: ரெயில் வண்டி மோட்டார்வண்டி அவர்களுக்குத் தெரியவே தெரியாது.

மாலை வேளைகளில் ஊரார் ஒன்றுகூடி உட்கார்ந்து பழங்கதை பேசுவார்கள். அப்பொழுது ரெயில் வண்டிக் கதை சொல்லுவார்கள்.

"அடே வண்டியிழுக்க ஒன்றுமே கட்ட வில்லை. தானே ஓடுகிறது. முதல் வண்டி புகை விட்டுக்கொண்டே ஓடுகிறது. வண்டி ஓட்டுகிறவன் மனம்போல் ஓட்டுகிறுன். ஒரு சமயம் ஆள் ஓட்டத்தில் போகிறது. ஒரு சமயம் காற்று வேகத்தில் போகிறது."

"ஆம் அண்ணு; என்ன சூச்சம் வைத்திருக்கிறுன்? அது எப்படி இருநூறு மூந்நூறு ஜனத்தை ஏற்றிக்கொண்டு அப்படிக் காற்ருய் பறக்கும்?"

"எனக்கு ஒன்றும் தெரியவில்லை. ஒரு வண்டியில் விறகு அல்லது நிலக்கரி போட்டு வைத்திருக்கிறுன். இன்னெரு வண்டியில் தண்ணீர் ஊற்றுகிறுன். தண்ணீர் பெரிய குழாய்களில் போய் நிரம்புகிறது. குழாயின் கீழ் நெருப்புப் போட்டுத் தண்ணீர் ஆவியாகும்படி காய்ச்சுகிறுன். அந்த ஆவிதான் வண்டியைத் தள்ளுகிறது என்று சொல்லுகிறுர்கள்."

"அடடா, என்ன சமர்த்து, என்ன சமர்த்து; தண்ணீர் காய்ந்து உண்டான ஆவியா ரெயில்வண்டி இழுக்கிறது. இது கலியுகத்து அதிசயம்தான்."

இந்தக் கதையைத் தினம் தினம் கேட்டு சந்தோஷித்தவர்களில் வேலாயுதம் என்று ஒரு

சிறுவன் இருந்தான். அவன் வெள்ளாடு மேய்க்கிறவன்.

வேலு ஒருநாள் தகப்பனாரிடம் போய், "அப்பா நான் ரெயில்வண்டி இன்னும் பார்க்கவில்லை. வயது 16 ஆகி விட்டது. சித்திரைத் திருவிழாவுக்கு நாம் மதுரைக்குப் போய் வருவோம்" என்றான்.

இனஜன பந்துக்கள் இருபதுபேர் அவனோடு கூடப் புறப்பட்டார்கள்.

வேலு பட்டுக்கரை வேஷ்டி உடுத்தித் தலையில் சிவப்பு லேஞ்சி கட்டிக்கொண்டான். காதில் கடுக்கன் போட்டு, வயிறு மார்பு கை முதுகு தெரியாமல் சந்தனம் பூசியிருந்தான். பார்த்தவர்கள் அடையாளம் சொல்லமுடியாது. அவ்வளவு சந்தோஷமாயிருந்தான்.

அவர்கள் கண்ணூர் ரெயில்வே ஸ்டேஷனில் அவசரமாய்க் கட்டமுது சாப்பிட்டு, வண்டிக்காகக் காத்திருக்கும்போது என்ன பேசுகிறார்கள்.

"அடே, வண்டி ஒரு நிமிஷங்கூட நிற்காது. ஜல்தி ஏறவேண்டும்" என்று ஒரு அனுபோகசாலி சொல்லுகிறான்.

"நாம் எல்லாரும் ஒரே வண்டியில் ஏறவேண்டும்" என்று பெரிய மனுஷன் சொல்லுகிறான்.

"அப்பா, மூட்டை பத்திரம்" என்று ஒரு அம்மை உரக்கச் சொல்லுகிறாள்.

"தம்பீ, டிக்கட் பத்திரம், மடியில் வைத்துக்கொள்" என்று இன்னொரு அம்மை பதட்டமாய் சொல்லுகிறாள்.

"வண்டி கண்மூடி விழிக்குமுன் பத்து மைல் போய்விடும்" என்று வண்டி பாராத ஒரு ஐயா சொல்லுகிறார்.

"அடே வண்டிவருகிறது, அதோ புகை."

"வாருங்கள், ஓடிவா, கண்ணு, அடே பொன்னு. இத்தனை நேரமா? உன்னையும் கூட்டி வரலாமா? சீ."

"காலில் முள், அண்ணா இதோ வந்து விட்டேன்."

வண்டியில் நெருக்கமாய் உட்கார்ந்து கொண்டார்கள். மனம்போல வெற்றிலை போட ஆரம்பித்தார்கள். "அக்கா நீபோடு, அண்ணா உனக்கு இந்தா புகையிலை, அம்மணி சுண்ணாம்பு கொடு" என்று ஆநந்தத்தில் இருந்தார்கள்.

சித்திரை மாசத்து வெயில். ரெயில் வண்டியில் ஆள் நெருக்கம், வியர்வை உடம்பில் தாரை தாரையாய் பூசியிருந்த சந்தனத்தைக் கரைத்து ஓடினது. வேலு வண்டிப் பாதை

யின் இரும்புத் தண்டவாளத்தின்மேல் கண்ணு யிருந்தான்.

அங்கே நரைத்த தலைப் பெரியவர் ஒருவர் கையில் விசிறி வைத்து விசிறிக்கொண்டு இருந் தார். அவரைப் பார்த்து வேலு பணிந்து நமஸ்காரம் பண்ணி "ஸ்வாமி இந்த மாதிரி வண்டி ஓட்ட முதலாவது சொல்லிக் கொடுத் தது யார்?" என்று கேட்டான். அவன் தோழர் அவனைப் பார்த்துக் கொல் என்று நகைத் தார்கள்.

அச் சமயம் வண்டி புறப்பட ஊஸில் கேட் டது. அவர்கள் சந்தோஷம் நிறைவாயிற்று. பெரியவர் ரெயில் வண்டியைக் கண்டு பிடித்த ஜார்ஜ் ஸ்டீவன்சன் சரித்திரத்தை அவர்களுக் குச் சொன்னுர்.

---

வினு:

1. ரெயில் வண்டியில் என்ன அதிசயம் இருக் கிறது?
2. வேலு மதுரைக்குப் போன கதை சொல்லு.





# 12. சிவப்பு இந்தியனும் வெள்ளை மனிதனும்

## தீமைக்குப் பதில் நன்மை செய்தல்

அமெரிக்கா என்று ஒரு விஸ்தாரமான தேசம் இருக்கிறது. அங்கே பெரிய காடுகள் அதிகமாய்க் காணலாம். அமெரிக்காவில் சிவப்பு இந்தியர் என்று ஒரு ஜாதி மனுஷர் இருக்கிறார்கள். அவர்கள் நாகரீகமான ஜனங்கள் அல்ல. பணக்காரரும் அல்ல. பெரிய வீடு கட்ட அவர்களுக்குத் தெரியாது. கூடாரங்களில் வசிப்பார்கள். ஆனால் வெள்ளை மனிதருக்குச் சுகமான வீடுகள் உண்டு. எல்லா வீடுகளும் பொதுவாய் வெகு தூரத்துக்கு ஒன்

ருய் இருக்கும். பட்டணங்களில் மாத்திரம் வீடுகள் நெருங்கி இருக்கும்.

ஒருநாள் சிவப்பு இந்தியன் ஒருவன் வேட்டைக்குப் போனுன். அவன் பெயர் எனக்கு ஞாபகம் இல்லை. வெகுதூரம் காட்டில் அலைந்துவிட்டுத் திரும்பினுன். இருட்டிப் போனது. பசியால் வருந்தினுன். அதனுல் நடக்க முடியாமல் வழியில் இருந்த ஒருவீட்டுக்குப் போனுன். அந்த வீட்டில் ஒரு பெரிய பணக்காரன் வசித்தான். அந்தச் சீமான் ஒரு வெள்ளை மனிதன். அவனுக்குப் பெரிய வயல்களும், தோப்புகளும் இருந்தன. வேண்டிய பழம் கிடைக்கும். ஆட்டுமந்தைகளும் மாட்டு மந்தைகளும் அநேகம் வைத்திருந்தான். அவனிடம் குதிரைகள் வேட்டை நாய்கள்கூட இருந்தன. அவனுக்கு ஒரு குறைவும் இல்லை என்று எல்லாரும் சொன்னுர்கள்.

சிவப்பு இந்தியன் பார்த்தான். "ஆஹா, நல்ல அதிஷ்டம், நல்ல வீட்டுக்கு வந்தேன். எனக்குத் தங்க இடமும் பசி தீரச் சாப்பாடும் கிடைக்கும்" என்று சொல்லிக் கொண்டான். கதவைத் தட்டினுன். மறுபடியும் தட்டினுன். பதில் இல்லை. பலமாய்த் தட்டினுன். கதவை இடித்தான். ஒரு பெரிய தடித்த மனிதன் வந்து கதவைத் திறந்தான். "என்னடா வேண்டும்?" என்று அதட்டிக் கேட்டான்.

"அப்பா, இருட்டில் வழி தெரியவில்லை. பசிக்கிறது....." என்று சொன்னான். 'இடம் கொடு' என்று இன்னும் சொல்லவில்லை. அதற்குள் பணக்காரன், "ஏண்டா, கழுதை! உனக்குமா என் வீட்டில் இடம்? ஓடிப்போ" என்று கோபித்துத் துரத்தினான். சிவப்பு இந்தியன் போய்விட்டான்.

சிலநாள் பொறுத்து வெள்ளை மனிதன் வேட்டைக்குப் போனான். அவனும் வழி தப்பி அலைந்தான். தற்செயலாய் அவன் துரத்திவிட்ட சிவப்பு இந்தியன் கூடாரத்துக்கே போய்ச் சேர்ந்தான். இந்தியன் அவனை அடையாளம் கண்டு கொண்டான். அவனுக்குச் சாப்பாடு போட்டான். தான் குடிக்கும் மதுபானத்தையும் கொடுத்தான். படுக்கச் சுகமான இடமும் ஏற்பாடு செய்தான். காலையில் எழுந்து அந்தக் காட்டின் வழி அழைத்துப் போய் வழிகாட்டி விட்டான். கடைசியாக "அப்பனே, உன் வாசலில் இருந்து ஒருநாள் துரத்திவிட்டாயே, அந்த இந்திய கழுதை இதுதான்" என்று சொன்னான். உடனே சீமானுடைய முகம் வாடிப்போனது. இந்தியனிடம் மன்னிப்புக்கேட்டான். பின்பு அந்தப் பணக்காரன் 'சிவப்பு இந்திய கழுதை' என்று யாரையும் சொல்லவில்லை.





# 13. சிவபூசை செய்த பூனை - I

பெருமாள் என்ற ஒரு வண்ணான் கும்ப கோணத்தில் இருந்தான். அவனிடம் ஒரு பெரிய பூனை இருந்தது. அதன் பெயர் வெண் மதி. பெருமாள் வீட்டில் அநேக எலிகளும் வயிறூரச் சாப்பிட்டு துள்ளிக் குதித்து அலையும். ஏனெனில் பெருமாளின் குழந்தைகள்சாதத்தை மேலும் கீழுமாய் சிந்துவார்கள். அடுத்த வீடும் ஒரு ஹோட்டல்.

ஒருநாள் வெண்மதி காலையில் ஸ்நானம் செய்து கழுத்தில் நாலு சரம் உத்திராக்ஷம் போட்டுக் கொண்டது. விபூதி கட்டுக் கட்டாய் வேத விதிப்படி பூசிக்கொண்டது. முறைப் படி உட்கார்ந்து மந்திரம் சொல்லிக் கொண்டு

இருந்தது. அதன் உதடு அசைந்தது. சத்தம் கேட்க வில்லை. கண்ணை அரைவாசி மூடிக் கொண்டது.

குட்டி எலி ஒன்று கூரையில் உட்கார்ந்த படியே அதைப் பார்த்தது. தன் சிரிப்பை அடக்க முடியாமல் கிச் கிச் கீச் என்று சத்தம் செய்துகொண்டு ஓடிப் போனது. தன் பாட்டனாரிடம் திக்கித் திக்கித் தான் கண்டதைச் சொன்னது.

பாட்டனார் கோபித்து "புத்தி இருக்கிறதா ? பூனையை எதிரே வைத்துக்கொண்டு இப்படிச் சந்தடி செய்யலாமா ?" என்றது.

எலிக்குட்டி : "தாத்தா, வெண்மதி சிவ பூசை செய்கிறது. நம்மை அது கவனிக்கிற தில்லை."

தாத்தா எலி : "பூனையாவது சிவபூசை யாவது ! சீச் சீ, பேசாதே."

குட்டி : "வந்து பாருங்கள்." கீச் கீச் என்று மறுபடி பெருஞ் சத்தம் போட்டது.

தாத்தா : "குழந்தாய், சந்தடி செய்யாதே. துஷ்டர்கள் சிவபூசை செய்தாலும் கெட்ட குணத்தை விடுவார்களா ? அவர்கள் காவேரி ஆற்றில் முழுகினாலும் பரிசுத்தம் ஆவார்களா ; இல்லை."

இதற்குள் கிழட்டு வெண்மதிக்கு ஞானம் உதயமான செய்தி எல்லா எலிகளுக்கும் தெரிந்தது. ஒவ்வொரு எலியும் பார்த்து இங்கும் அங்கும் ஓடி திரிந்தன. வெண்மதி ஒன்றையும் பாராமல் தியானத்தில் இருந்தது.



## 14. சிவபூசை செய்த பூனை - II

குட்டி எலிகள் வெண்மதியைச் சுற்றிப் பயமில்லாமல் ஓடின. பெரிய எலிகள் சொன்னாலும் கேட்கவில்லை. அப்போது வெண்மதி மெதுவாய்க் கையமர்த்தி கோபிக்கவேண்டாம் என்று சைகை காட்டினது. பெரிய எலிகள் கிட்டப்போகாமல் விலகி நின்று நமஸ்காரம் செய்தன.

பூனை — கைகாட்டி, "லோகவாழ்வு அநித்தியம்" என்றது.

எலிகள் — ஸ்வாமி, எங்களுக்கு பிழைக்கும் வழி காட்டவேண்டும். எங்களுக்கு வீட்டிலும் வெளியிலும் ஆபத்து.

பூனை — ஆஹா! அது என்ன?

கிழ எலி — கறுத்த கண்ணும், சிவந்த பாதமும் முறுக்கு மீசையும் உள்ள நாலுபேர் பத்தயத்தில் அகப்பட்டுக் கொண்டார்கள். எங்கள் கஷ்டத்தைச் சொல்லவே முடியாது.

பூனை — சிறுவர்காள், நான் உங்களுக்காக கவலைப்படுகிறேன்.

எலிகள் — என்ன அன்பாய் பேசுகிறார் !

கிழ எலி — அடியார் உம்மை நம்புவது எப்படி? தேவரீர் எங்களைச் சாப்பிடுகிறவர்.

பூனை — அப்பா, பெரியவனே, நீ நல்லவன், ஞானவான். நாம் சிறுவர்களாய் இருக்கும் போது எத்தனையோ தீமைகள் புத்தி இல் லாமல் செய்தோம். பெரியவனாகி, கண் மங்கி, காதுமந்தமாகி, பல்போய், சொல் தவறி, கால்தள்ளாடும் காலத்தில் நல்ல புத்தியோடு இருக்கவேண்டும். தருமம் செய்ய வேண்டும். மோட்சம் அடைவது எப்படி ?

கிழ எலி — நாய்வாலை மட்டை வைத்துக்கட்டி நேராக்கலாமா ?

பூனை — இந்த ஒருதரம் என்னை நம்பு. இனி மேல் காய்ந்த இலைகளை உண்டு பனித்துளி களை குடிப்பேன். நாள்தோறும் விரத மிருந்துபரிசுத்தமாகஎண்ணியிருக்கிறேன்.

கிழ எலி — ஐயா, உம்முடைய பல் எலியின் எலும்பை ஒடிக்கிறதற்காகப் பலமாய் இரு க்கிறது. உமது நாவு சுரசுரப்பாய் இருப் பது எதற்காக ? எலியின் மாம்சத்தை

எலும்பிலிருந்து சுலபமாய் எடுப்பதற்கா கத்தானே. எஃகுபோல் உறுதியான நகம் வைத்திருக்கிறீர்களே, எதற்காக? எலியின் உடலைக் கிழிக்கத்தானே. அதை இப் போது ஒழித்து விட்டீர்களா?

பூனை — நரைத்த கிழவா, நான் இப்போது மனம் மாறி இருக்கிறேன். என்னை நம்பு.

கிழ எலி — எதற்காக?

பூனை — நான் காசியாத்திரைக்குப் போக நினை த்து இருக்கிறேன், புறப்படுங்கள். நான் உங்களையும் என்னோடு அழைத்துச் செல்லுகிறேன்.

இந்த வார்த்தை எல்லாருக்கும் பிரியமாய் இருந்தது. குட்டி எலிகள், வாலிப எலிகள் எல் லாம் சந்தோஷமாய் குதித்துத்துள்ளின. கிழ எலியின் பேச்சை எடுத்துக்கொள்ளவில்லை. எப் போது காசிபார்க்கலாம், கங்கையில் முழுகலாம் என்ற ஏக்கம் உண்டானது. எல்லாம் தயாராய் இருக்கும்போது கேசவன் என்றநாய் அங்கே திடீரென்று வந்துவிட்டது.

வெண்மதி ஒரே பாய்ச்சலாய் அண்டை யில் இருந்த வேப்பமரத்தில் ஏறிக்கொண்டது. எலிகள் ஓடித் தமது வளைகளில் புகுந்து கொண்டன.



# 15. ஸர்க்கஸ் விளையாட்டு

"இதோ வீதியில் எத்தனை யானைகள். கண்ணு ஓடிவா. 5 யானை வரிசையாய் போகிறது. ஒரு யானைமேல் குரங்கு ஊர்கோலம் வருகிறது. வாத்தியம் வாசிக்கிறார்கள்."

"இது சர்க்கஸ் விளையாட்டுக் கூட்டத்தார். சாயங்காலம் வேடிக்கை பார்க்கப் போவோம்."

"எத்தனை மணிக்கு?"

வித்தை பார்க்க இரவு 9 மணிக்குப் போகலாம். மாலை 5-மணிக்கு சர்க்கஸ் மிருகங்களைப் பார்க்கப் போவோம்.

அப்படியே மாலை நேரம் கூண்டுகளில் அடைத்துக் கிடக்கிற கொடிய மிருகங்களைப் பார்த்தோம்.

புலியும் சிங்கமும் அயர்ந்த தூக்கத்தில் இருந்தாற்போல் தோன்றினது. அவைகளுக்குப் போட்ட மாம்சம் முதலாய்த் தின்று முடிக்கவில்லை. யானையின் காலில் கட்டுப்போட்டிருந்தாலும் ஆடி அசைந்துகொண்டே யிருந்தது. புல் சாப்பிடும் வேளை. இடையில் பேசக்கூடாதென்று விலகி நின்றோம். யாராவது நல்ல பையன்கள் ஒரு துண்டு கரும்பு போடுவார் என்று யானை தன் சிறிய கண்ணால்

ஆசையோடு பார்த்தது. குரங்கை ஒருபக்கம் கட்டிப்போட்டு இருந்தது. அதற்கு உட்கார சாவகாசம் இல்லை. செய்ய வேலையும் இல்லை. இங்கும் அங்கும் ஓடிக்கொண்டே யிருந்தது.

குதிரைகள் சாதுக்கள் மாதிரி நின்றன. என்றாலும் அவைகள் எண்ணம் பொழுது அடையாதா, சர்க்கஸ் வாத்தியம் முழங்காதா, என்பதுதான். அடிக்கடி காலை உதறிக்கொண்டு நின்றன.

இரவில், அப்பா அம்மா, மாமா வீட்டார், சித்திவீட்டார் எல்லாரும் கூடி விளையாட்டுப் பார்க்கப் போனோம். கூடாரத்துக்குள் போனதும் அது ஒரு புது உலகம் என்று நினைத்தேன். அவ்வளவு ஜனங்கள் நேர்த்தியாய் உடுத்தி வந்திருந்தார்கள். காந்தவிளக்கு தகதக வென்று ஜொலித்தது.

திடீரென்று வாத்தியங்களை நிறுத்தி, ஒரு மணி அடித்தார்கள். ஒரு கூட்டம் வாலிபரும் சிறுவரும் ஓடிவந்து வித்தை பண்ணினார்கள். பெரிய ஆள் ஒருவன் நடுவில் நிற்கவிட்டு, அவன் தோளிலும் இடுப்பிலும் கால்வைத்து ஏறிப் பத்துப்பேர் வரையில் நின்றார்கள். வெகு ஆச்சரியம். இது முடிந்தவுடனே வந்த அவசரத்தோடு ஓடிப்போனார்கள். நாலு கால் நிறுத்தி இடையில் ஒரு கம்பி போட்டார்கள்.

ஒரு பெண் அந்தக் கம்பிமேல் நடந்தாள். குடை ஒன்று கையில் வைத்துக்கொண்டு கம்பி மேல் முன்னும் பின்னும் ஆடி ஓடி வேடிக்கை



ஒரு பெண் கம்பிமேல் நடந்தாள்.

காட்டினாள். ஒரு சைக்கிள் வண்டியைக் கம்பி மேல் வைத்து அதன்மேல் ஏறி உட்கார்ந்து

சவாரி செய்தாள். அவள் உடையும், வாத்தியங்களின் இனிய ராகமும் கூடி மெத்த நேர்த்தியாய் இருந்தது. எல்லாரும் கை தட்டினூர்கள். அவள் போய்விட்டாள்.

ஒரு குரங்கு ஒரு குதிரைமேல் சவாரி பண்ணிக்கொண்டு வந்தது. கோமாளி ஓடிவந்து சர்க்கஸ் முதலாளிபிடம் குதிரையை விலைக்குக் கேட்டான். பின்பு குதிரைமேல் ஏறப்போனுன். குதிரை தடை பண்ணிற்று. மூன்று விசை பொத்துப் பொத்தென்று பனங்காய் மாதிரி விழுந்தான். இரண்டுபேர் கூடி அவனைத் தூக்கிக் குதிரைமேல் வைத்தார்கள். சந்தோஷமாய் கைதட்டினுன்.

குதிரை வேகமாய் ஓட ஆரம்பித்தது. ஆ கூ என்று கத்தினுன். குதிரையின் பிடரியைப் பிடித்துக்கொண்டு தொங்கினுன். ஆ கூ என்று பரிதாபமாய் கூச்சல் போட்டான். குதிரை அதிவேகமாய் ஓடிற்று. அவனுக்கு ஒருவரும் உதவி செய்யவில்லை.

இந்தச் சமயம் இன்னெரு குதிரையும் வந்து சேர்ந்தது. கோமாளி எழுந்து குதிரைமேல் நின்று கொண்டான். அந்தர் அடித்தான். ஒரு குதிரைமேலிருந்து அடுத்த குதிரைக்கு மாறிமாறித் தாவினுன். குதிரைமேல் நின்றுகொண்டே தன் சட்டைகளை ஒவ்வொன்ருய்க் கழற்றி எறிந்தான். மாயக்கள்ளன்.

இதற்குப் பிறகு யானைகள் வந்து சிறு குழந்தைகள் குஸ்திபோட்ட மாதிரி நடந்தும் படுத்தும் சொன்ன சொன்னபடி திரும்பியும் வித்தை பண்ணின. ஒரு பெரிய யானை தும்பிக்கையால் சபையாருக்கு வந்தனம் செய்தது. பின்பு ஒருகால் நொண்டிபோல் நடந்தது. பின்பு இரண்டு காலும் நொண்டிபோல் நடந்தது. ஒரு கட்டைமேல் உட்கார்ந்து புல்லாங் குழல் மாதிரி வாத்தியம் ஒன்று வாசித்தது. அதன்பின்னுல் வைத்திருந்த மேளத்தில் தன் வாலால் அடித்து தாளம் போட்டுக்கொண்டது.

யானைக்கு மூன்றுசக்கர வண்டி ஒன்று கொடுத்தார்கள். யானை அதன்மேல் உட்கார்ந்து சவாரி செய்தது.

புலி சிங்கம் வந்து வேடிக்கை பண்ணுகிறதற்குமுன் நான் தூங்கிவிட்டேன். கோமாளிகள் இரண்டுபேர் செய்த வித்தைகளையும் பட்ட உதையையும் குறித்து இன்னொரு நாள் சொல்லுவேன்.

---

**வினு :**

1. கோமாளி செய்த வித்தை என்ன?
2. யானை செய்த விளையாட்டு என்ன?
3. நீ பார்த்திருக்கும் சர்க்கஸ் விளையாட்டைப் பற்றிச் சொல்லு.





# 16. பிள்ளை பக்தி

ஐரோப்பா என்னும் கண்டத்தில் கிரீஸ் என்று ஒரு தேசம் இருக்கிறது. அது நிரம் பவும் விசேஷமான தேசம். அது வெகு காலத்துக்கு முன்னமே நாகரீகத்தில் பெயர் போன இடம். பழையகாலத்து ஜனங்களில் அவர்களைப்போல வேறு எந்த ஜாதியாரும் இருக்கவில்லை.

இந்த தேசத்தில் பந்தய விளையாட்டுகள் உண்டு. தேசத்தார் எல்லாரும் அந்த விளை யாட்டுப் பார்க்கப் போவார்கள். அதில் பந்த யம் பெறுவது அவர்களுக்கு மிகவும் பெருமை. பந்தயப்பொருள் பொன்னும் அல்ல, வெள்ளி யும் அல்ல. ஒலிவ இலையினால் செய்த ஒரு கிரீடம். இதற்காக ஜனங்கள் வெகுவாய்ப் பிரயாசப்படுவார்கள். பந்தயம் பெற்றவனுக்கு அவன் இனத்தார் வெகு சந்தோஷமாய் மரி யாதை செய்வார்கள்.

ஒருநாள் ஒரு பெரிய மனுஷன் அங்கே வேடிக்கை பார்த்துக்கொண்டு நின்றான். அவ னுடைய பிள்ளைகள் மூன்று பேர் அங்கே பல விளையாட்டுகளிலும் சேர்ந்திருந்தார்கள். அவ னுக்குக் கண் பார்வை மங்கினதாய் இருந்தது. பந்தய ஓட்டங்கள் ஆரம்பமானது. உடனே

எல்லாரும் ஜெயித்தவனைப் பார்க்க ஆசையாய் காத்து இருந்தார்கள். முந்தி வருகிறவனைப் பார்த்துக் கை கொட்டி அவனைச் சந்தோஷப் படுத்தினார்கள். பெரிய மனுஷன் பார்த்தான். அவனுக்கு ஜெயித்த ஆள் யாரென்று அடை யாளம் தெரியவில்லை. ஜெயசீலன் தலையில் ஒலிவ இலைக் கிரீடம் சூட்டி வந்தான். ஜனக் கூட்டத்தார் பெரியவனைப் பார்த்து, "பெரிய வரே, உமது மகன் இதோ வருகிறான். அவனை ஏற்றுக்கொண்டு ஆசீர்வதியும்" என்று கூச்ச லிட்டார்கள். உடனே தன் மகனது வீரத்திற் காக மகிழ்ந்து அவனை நோக்கி நடந்தான்.

தன் தகப்பன் வருவதைக் கண்ட மகன் அவனிடத்தில் ஓடிக் கட்டி அணைத்துக் கொண்டு, தன்னுடைய கிரீடத்தை அவன் தலை மேல் வைத்து அழைத்து வந்தான். தகப்பன் தான் பந்தயம் கெலித்ததுபோல் தோன்றிற்று. ஜனங்கள் எல்லாரும் கை கொட்டிக் கூச்சல் இட்டார்கள்.

இப்படி இருக்கும்போது இரண்டாவது பந்தயத்தில் ஒரு மனுஷன் ஜெயம் அடைந்து வந்தான். அவன் தூரத்தில் வரும்போது அது யார் என்று கிழவனுக்குத் தெரியவில்லை. ஜனங்கள் அப்பா, இவனும் உன் மகனே என்று கூச்சல் இட்டார்கள். பெரிய மனுஷ

னுக்கு ஆனந்தம் பொங்கியது. அவனை ஏற்றுக்கொள்ளும்படி ஓடப் பார்த்தான். கால் எழவில்லை. அதனல், மகன் மான்போல் துள்ளி ஓடிவந்து, தன் கிரீடத்தையும் எடுத்துப் பிதாவின் தலைமேல் வைத்தான். பந்தயம் கெலித்தது பிதாதானே, அல்லது பிள்ளையோ என்பது ஒருவருக்கும் புலப்படவில்லை. ஜெயித்த மக்கள் தமது தகப்பனுக்கு அவ்வளவு மரியாதை செய்தார்கள்.

இத்தருணம் மூன்ரும் பந்தயம் பெற்ற ஒரு மனுஷன் தலையில் ஒலிவ இலைக் கிரீடம் வைத்துக்கொண்டு ஓடி வந்தான். ஜனங்கள் ரொம்பவும் கை கொட்டிச் சத்தம் செய்தார்கள். “அப்பா பாக்கியவானே, இதோ உனது மூன்ரும் மகனும் ஜெயித்து வருகின்ருன். இனி உனக்கு என்ன குறை? இப்போது நீ உயிர் விட்டாலும் குற்றம் இல்லை” என்று கூவினர்கள். அந்தச் சமயம் மூன்ரும் மகன் ஓடிவந்து தன் கிரீடத்தையும் தகப்பனர் தலையில் சூட்டி, அவனைத் தழுவி மரியாதை செய்தான்.

இத்தனை ஆரவாரங்கள் மத்தியில் தகப்பன் பிணமாகிக் கீழே விழுந்தான்.

“அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்”





வரிசையாய் நின்று ஒரு மங்களம் பாடினேம்.

# 17. மாஞ்சோலையும் மாணுக்கரும்

நான் இப்போது என்னுடைய ஊரை அடுத்து உள்ள தோப்புகளைப்பற்றி ஒரு கதை சொல்லுகிறேன். என் ஊரின் பெயர் வேலூர். அது மிக்க அழகான ஊர். வேலூரைச்சுற்றிப் பல மலைகள் குறுக்கும் நெடுக்குமாய் நிற்கின் றன. மழை காலத்தில் சிற்ருறுகள் இரைச்ச லுடன் இறங்கிவரும். மேலே உள்ள கற்களைப் புறட்டிக் கீழே தள்ளும். மாலைநேரம் அந்தச் சிற்ருறுகளைக் காணச் சிறுவர்கள் கூட்டமாய்ச் சேர்ந்து ஓடுவோம்.

மாங்காய்க் காலம் மாந்தோப்பு பார்க்கப் போவது எங்களுக்கு வழக்கம். எங்கள் பாடசாலை தலைமை உபாத்தியாயர் மிகவும் நல்லவர். அவருக்கு உதவியாக ஏழு உபாத்தியாயர்களும், சுந்தரமுதலி என்று பெயர் கொண்ட ஒரு சேவகனும் உண்டு. மாம்பழக்காலம் ஒருநாள் எல்லாரும் சேர்ந்து மாந்தோப்புக்குப் போனோம். பையன்கள் எல்லாரும் ஆடிப்பாடிக் குதித்துக் கூத்தாடிக்கொண்டே நடந்தோம். ஐயா அவர்கள் வயதாளி. மற்ற உபாத்திமாரும் எங்களைப் போல் ஓடமாட்டார்கள். எங்களுக்கு வழி தெரியும். அதனால் சுந்தரமுதலி எங்களுக்குக் கதை சொல்லியும் வேடிக்கைப் பாட்டுப் பாடியும் நடத்திக்கொண்டு போனான்.

தோப்பைக் கண்டவுடன் கதை கேட்பது கூடாத காரியம். அங்கே அடிமரம் எதுவும் காணக்கூடாது. அவைகள் எல்லாம் ஒட்டு மாமரங்கள். தரையில் பெரிய கிளைகள் அருகன்புல் கொடி படர்ந்த மாதிரி ஓடிக் கிடக்கின்றன. மாங்காய் கொத்து ஆயிரம் குலை ஆயிரம் என்பதாய் தொங்குவதைக் காண்பது என்ன ஆநந்தம்! சில ஜாதி மரங்களில் பூவே நிறைந்து மூடி இருந்தது.

மரங்கள் எவ்வளவு உயரமாய் இருந்தாலும் அடியில் பெரிய கிளைகள் இருப்பது என்னைப் போல் ஒத்த மூன்று அடி பையனுக்கு மிகவும்

சந்தோஷம். நாங்கள் அவைகளில் ஏறிக் குரங்குகள்போல் விளையாடலாம்.

பையன்கள் மிகுந்த பரபரப்புடன் நிற்ப தைப் பார்த்த முதலாளி அளவு இல்லாத பட் சத்துடன் எங்களைப் பார்த்துச் சிரித்துக் கொண்டார். இச்சமயம் ஐயாவும் மற்ற உபாத் திமார்களும் வந்து சேர்ந்தார்கள். முதலாளி அவர்களை எதிர்கொண்டு ஏற்றுக்கொண்டார். உபசார வார்த்தை பலதும் சொன்னர். வெகு சந்தோஷமாய்ப் பேசினர். அப்போது ஐயா "குழந்தைகளுக்கு தோப்புக்குள் அலைவது மகா பிரீதி. நம்மை இருக்க விடுகிருஞ......" என்று ஆரம்பித்தார். முதலாளி அதற்குள் "அழுத குழந்தை பால் குடிக்கும். அவர்கள் செய்ததே சரி" என்ருர்.

பின்னும் அவர் "அடே அப்பா, வாருங் கள் இன்னும் இரண்டுமெணி நேரம் தோப்புக்கு எஜமானர் நீங்கள். கிணறுகளில் இறங்கவேண் டாம். காய், பூ, பிஞ்சு எதையும் நஷ்டப்படுத் தாமல் நடந்துகொள்ளுங்கள். ஏனென்ருல், அவைகள் உங்களைப்போல் வளரும் குழந் தைகள்'' என்று சொன்னர். இதன் பின்பு நாங்கள் மரங்களில் ஏறி வெகு வேலைகள் செய் தோம். அங்கே இருக்குமட்டும் பழம் சாப் பிடக்கூட மனம் வரவில்லை.

முதலாளி குருநாதப்பிள்ளை உபாத்தியாயர்களுக்குப் பால், பழம், இளநீர் கொடுத்து உபசரணைகள் செய்தார். நாங்கள் திரும்பும்பொழுது ஐயா தமது பையை எடுத்து பிள்ளை அவர்களுக்குப் பணம் கொடுக்கப் போனார். அவரோ பெரிய சத்தமாய்ச் சிரித்துக்கொண்டு "நல்ல மாதிரி, ஸ்வாமி, தாங்களும் குழந்தைகளும் இவ்வளவு தூரம் வருவதற்கு நான் என்ன தவம் செய்தேனோ" என்றார்.

எல்லாரும் வரிசையாய் நின்று ஒரு மங்களம் பாடி விட்டு முதலாளிக்கு நமஸ்காரம் செய்தோம். குருநாதப்பிள்ளை அவர்கள் "ஐயா இன்னொரு நாள் நமது பெரிய தோப்புக்கு வாருங்கள். அங்கேயும் மல்கோவா, ஹொதாதாத், பீத்தர், காதர், தில்பசந்து, பெங்களூரா முதலான எல்லாத் தினுசுகளும இருக்கின்றன. மேலும் கட்டுமாங்கன்று உண்டாக்கும் விதம் அங்கே காணலாம்" என்றார்.

---

வினா :

1. கட்டுமா மரங்கள் கிளை விடுவது எப்படி ?
2. கதையில் சுந்தரமுதலி செய்த வேலை என்ன ?
3. வேலூரைச்சுற்றி என்ன வளம் பார்க்கலாம்.
4. நீயும் உன் தோழரும் ஒரு மாந்தோப்புக்குப் போனால் எப்படி விளையாடுவாய் ?





# 18. சிலந்திப் பூச்சி

என்னுடைய மாமா வீட்டில் ஒருகாலத்தில் சிறு கண்ணி என்று பெயர் கொண்ட ஒரு சிலந்திப் பூச்சி வீடு கட்டி வாழ்ந்தது. அதனுடைய வீடு ஒரு வலைதான்; வெகு அழகானது. அந்தப்பக்கம் போக்குவரத்தாய் இருக்கும் ஈ கொசு போன்ற சிறு பிராணிகள் வலையில் அகப்பட்டு சிறு கண்ணியின் உணவாகும். அந்தவழி போக ஒரு சோலியும் இல்லாத ஈக்கள்கூட சிறு கண்ணியின் அழகான வீட்டைப் பார்க்கப் போய், சிக்கிக்கொள்ளும்.



அப்பொழுது சிலந்தி, "குழந்தாய் கீழே பார்த்து நடக்கவேண்டும். என் வீட்டையும் கெடுத்தாய், உன் காலுக்கும் சுருக்குப் போட்டுக்கொண்டாய்" என்று இனிமையாய்ச் சொல்லும். கிட்டி வந்த வுடனே ஈயை விடுவிக்குமா? இல்லை.

ஈயானது பயந்து, "அம்மா உனக்கு நமஸ்காரம்; தயை செய்து இந்த ஒரு முறை மன்னிப்புக்கொடு. இனிமேல் இந்த வழி வரமாட்டேன்" என்று சொன்னாலும் சிறு கண்ணி கவனிக்காது. தன்னுடைய இரண்டு கொடுக்கினாலும் கொட்டித் தன் விஷத்தினால் ஈயைக் கொன்று போடும். பின்பு முகமலர்ச்சியுடன் சாப்பிடும்.

மற்ற ஈக்கள் அதைப்பார்த்து "சீ இப்படியும் செய்யலாமா? சிறு கண்ணி மகா மோசக்காரி. இனி ஒருவரும் சிறு கண்ணி வீட்டிற்குப் போகவே கூடாது" என்று பேசிக்கொள்ளும். என்றாலும் சிறு கண்ணி ஒரு நாளும் பசியாய் இருந்ததில்லை. புத்திகெட்ட பூச்சிகள் நாள்தோறும் அதின் வலையில் சிக்கிக்கொள்ளும். அதனால் வலை பழுதுபட்டாலும் சிறு கண்ணி சிறிது நாழிகைக்குள் அதைப் பழுது பார்க்கும்.

சிலந்தியின் வயிற்றிலிருந்து ஒரேசமயத்தில் 4000 நூல்கள் வெளிப்பட, அது தன்

பின்னங்கால்களால் நூல் திரித்து அதை உறுதி யாக்குகிறது, என்ன சமர்த்து! அதனால் சிலந்தி யின் வலை தானாய்க் கிழிந்து போவதில்லை.

ஒருநாள் ஷண்பகம் ஒரு மூங்கில் கோலில் ஒரு துடப்பம் கட்டி, சிறு கண்ணியின் சிறந்த வீட்டைத் துடைத்து எடுத்து, அவளையும் கொன்று போட்டாள். மிளகு அளவு பருமனான ஒரு குஞ்சு வீடு இல்லாமல் இங்கும் அங்கும் ஓடித் திரிந்தது. அதன் எட்டு நீண்ட கால்களையும் அப்போது எண்ணிப் பார்த்தேன். அப்பொழுது சிலந்திக் குழந்தை என்னோடு பேசினது :

"என் காலை ஏன் பார்க்கிறாய்?"

"உனக்கு இத்தனை கால் என்னத்திற்கு?"

"கவனித்துப் பார்."

"கவனித்தேன். நீ நூல் திரிக்கிற நல்ல வேலையாள். அதற்காகவே கால் ஒவ்வொன்றிலும் ஏழு கணுக்களும், கால் நுனியில் விரல்களும் இருக்கின்றன; ஆனால் உன்னிடத்தில் ஒரு பெரிய குற்றம் உண்டு."

"என்ன குற்றம்?"

"எனக்குப்பார், தலை, மார்பு, வயிறு என்று சரீரத்தில் மூன்று பாகம் இருக்கிறது. பூச்சி ஜாதிக்கும் தலை, மார்பு, வயிறு என்று மூன்று

பாகம் இருக்கிறது. உனக்குத் தலையும் வயிறும் ஆகிய இரண்டே பாகம் இருக்கிறது. என்ன அவமானம் இது!

"எனக்கு மார்பு இல்லாவிட்டாலும் என்ன வேலை செய்யாமல் இருக்கிறேன்? என் வயிற்றின் அடிப்பக்கம் பார். இதில் நாலு அல்லது ஆறு துவாரங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு துவாரத்தையும் ஆயிரம் கண்கள் உள்ள சல்லடைகள் மூடி யிருக்கின்றன. இத் துவாரங்கள் வழியாய் நூல் வரும். எனக்கு இஷ்டமான பொழுது மட்டுமே நூல் வரும். பூச்சிகள் இந்த மாதிரி வேலை செய்யுமா?"

"ஆம், நீ சமர்த்தன். உனக்குப் பல கண்கள் தலையில் உண்டு. வேலை எல்லாம் தெரியும். குணம் சரியாய் இல்லை. பூச்சிகளைத் தின்கிறாய்?"

"ஐயா, நீங்கள் என்ன சாப்பிடுகிறீர்கள்? ஆடு, மாடு, கோழி கொலை செய்வீர்கள். அல்லது காய், கனி, கிழங்கு உண்டு செடிகளைக் கொலை செய்வீர்கள். இதோ போகின்றேன். காற்று வீசுகிறது. எனக்கு வலை பின்னத் தகுந்த வேளை இதுவே" என்று சொல்லி ஓடிப்போனது.

---

**வினவும் வேலையும் :**

1. சிலந்திப்பூச்சி வலை பின்னுவதைக் கவனித்துப் பார். அதைப்பற்றி எழுது.
2. சிலந்தி உணவு தேடுவது எப்படி ?
3. சிலந்தியின் கண் எப்படிப்பட்டது ?
4. சிலந்தி, அதின் வலை, கால் வரை.



# 19. மின்மினிப் பூச்சி

**1.** மின்மினியே மின்மினியே
மிளிர்கின்ற மின்மினியே
மின்னிடு மோர் மின்னலைப் போல்
மின்னுகின்ற மின்மினியே.

**2.** கானகத்தின் தேவதைகள்
களிப்போடு நடமாட
வானகத்தின் மீனினம்போல்
மின்னொளிநீ வகுப்பாயே.

3. மின்மினியே உன்தனைப்போல்
என்னுடலும் மின்னிடுமேல்
மின்மினியாய் அம்மாவின்
காதினிலே மின்னிடுவேன்

4. இருள்கூடும் இரவுதன்னில்
இருள்நீக்கும் சிறு விளக்கே
கருஞ்சோலைச் செடிதோறும்
ஒளிவீசிக் களிப்பாயே.

5. இலைதோறும் தங்கிடுவாய்
இலைதோறும் மின்னிடுவாய்
இலைபோன்ற இறகாலே
உன்ஒளியை மறைத்திடுவாய்.

6. அங்குமிங்கும் பறந்திடுவாய்
அழகாக மின்னிடுவாய்
அங்குமிங்கும் தங்கிடுவாய்
அற்புதமாய் மின்னிடுவாய்.

7. மலராத மலர்தன்னை
விரித்திடவே வருகின்ற
மலர்மேனி வனதேவி
தன்வழியை விளக்கிடுவாய்.





## 20. மதிகெட்ட ராஜா கதை

அநேக வருஷங்களுக்கு முன் வட இந்தியாவில் யமுனா நதிக் கரையில் ஒரு செழிப்பான நாடு இருந்தது. அந்த நாட்டை ஒரு ராஜா ஆண்டு வந்தார். அவர் எந்தக் காரியத்திற்கும் ஜோசியம் சொல்லுகிறவர்களைக் கூப்பிட்டுக் கேட்பார். அவருக்கு வெகு நாளாய் பிள்ளை இல்லாதிருந்தது. அப்புறம் தெய்வ கடாக்ஷத்தால் ஒரு அழகிய பெண் மகவு பிறந்தது.

உடனே ராஜா ஜோதிடர்களை அழைத்து ஜாதகம் எழுதி, குழந்தையின் அதிஷ்டத்தைக் குறித்து விசாரித்தார். சாஸ்திரிகள் குழந்தையினால் அநேக நஷ்டங்கள் ராஜாவுக்கு உண்

டாகும் என்று சொன்னுர்கள். ராஜா குழந்தை யை ஆற்றில் போடத் தீர்மானித்தார். ராணி என்ன சொல்லி அழுதபோதிலும் அரசன் தீர் மானத்தை மாற்றவில்லே.

மூன்ரும்மாதம் ஓர்இரவு ராணி அயர்ந்து நித்திரை செய்யும்போது குழந்தையை ஒரு மரப் பெட்டியில் வைத்து, பெருகி ஓடும் ஆற் றில் மிதந்து போக விட்டார்கள். பெட்டி ஓரிடத்தில் கரையில் ஒதுங்கிக் கிடந்தது. அந்த இடம் ஒரு பெருங் காடு. ஒரு வேடன் மட்டும் அங்கே தனது மனேவியுடன் வாசஞ் செய்தான்.

ஆற்றில் விடப்பட்ட சிசு இருந்த பெட்டி கரையில் ஒதுங்கவும் காகங்கள் வந்து கூடின. கழுகுகள் விருந்து உண்ணும் ஆசையால் ஆகாயத்தில் வட்டமிட்டன. குழந்தை பசி யால் கூவி அழுத குரல் அவைகளேக் கிட்டிச் சேரவிடாது ஓட்டினது.

அதிகாலேயில் தன் வழக்கம்போல் அங்கே குளிக்கப்போன வேடன் மேற்சொல்லிய காரி யங்களேப் பார்த்தான். நெருங்கிப் போய் பெட்டிக்குள்ளே இருந்த சிசுவை அதிசயத் துடன் ஏந்திக்கொண்டான். குளிர் சகிக்காம லும் பசியின் கொடுமையாலும் அழுத சிசு வேடன் கையில் வந்தவுடனே அழுகையை

நிறுத்தி அவனுடைய முகம் நோக்கினது. அன்று முதல் வேடனும் குழந்தையும் நல்ல சிநேகிதர் ஆனார்கள். அவன் விரைவாக வீட்டுக்குப் போய் தன் மனைவியிடம் கொடுத்தான். குழந்தைக்கு மங்களவல்லி என்று பெயர் இட்டார்கள்.

குழந்தை மங்களவல்லி நாள் ஒரு வண்ணம் பொழுது ஒரு மேனியாய் வளர்ந்து வந்தாள். வேடனும் அவன் மனைவியும் தங்களுக்குத் தெரிந்த வித்தை எல்லாம் அவளுக்கு போதித்தார்கள். அவள் காடுகளில் மனம் போல உலாவி, காய், கனி, கிழங்கு தேடி உணவுக்காக வீட்டுக்குக் கொண்டு வருவாள். வேலை ஒழிந்த நேரங்களில் நூல் நூற்கவும் துணி நெய்யவும் கற்றுக்கொண்டாள்.

ராஜாவுக்கு வேறு மகவு பிறக்கவில்லை. ராணியோ அழுது துக்கமாகவே எப்போதும் காலம் போக்கினாள். நாட்கள் வாரங்களாகி, மாதங்களாயின. பல வருஷங்களும் ஆனது. அரண்மனையில் சந்தோஷம் இல்லை. ராஜாவும் ராணியும் காடுகளில் சிலகாலம் வாசம் செய்ய விரும்பினார்கள்.

ஒருநாள் ராணி தவசிகள் உடுத்துகின்ற மாதிரி நார் உடை உடுத்தி, காட்டில் அலைந்து கொண் டிருந்தாள். அங்கே கனிகள் சேகரிக்க

மங்களவல்லி கூடையுடன் வந்தாள். அவளைப் பார்த்த ராணி மனுஷ சஞ்சாரமில்லாத இந்தக் காட்டில் நடமாடுகிற இவள் யார் என்று அதிசயித்தாள். பேச நாவு எழாமல் பிரமித்து நின்றாள்.

மங்களவல்லி இதுவரையில் வேடனையும் அவன் மனைவியையும் தவிர வேறு ஒருவரையும் கண்டதில்லை.

ராணி — சின்னப் பெண்ணே, நீ யார்?

மங்களவல்லி — "நீ யார், நீ தான் சூனியக்காரியோ? என்னைத் தின்பாயோ? அல்லது பாம்பு பல்லியாக மாற்றுவாயோ? என்னை அப்படிச் செய்யாதே, என் அம்மை அழுவாள்" என்று அவசரமாய்ச் சொன்னாள். கண்ணீர் அவள் கன்னங்களில் தாரை தாரையாய் ஓடினது.

ராணி — "நான் சூனியக்காரக் கிழவி அல்ல. கண்ணே, உனக்கு ஒரு தீங்கும் நான் செய்யமாட்டேன். நீ இப்பொழுது அழக் கூடாது. வா, நாம் சிநேகிதர் ஆகலாம்" என்று சொல்லி கிட்டிப் போனாள்.

மங்களவல்லி பயந்து ஒரே ஓட்டமாய் ஓடிப்போனாள். ராணி திகைத்தவளாய் தனது இருப்பிடம் போனாள். சங்கதி ராஜாவுக்குச் சொன்னாள்.

மறுநாள் ராஜா ஆற்றோரம் உலாவப்போனார். ஆற்றில் நீந்தி விளையாடும் சிறு பெண்ணைப் பார்த்து அங்கே ஒருபக்கம் ஒதுங்கி நின்றார். மங்களவல்லி கரை யேறி உடுத்திக் கொண்டவுடனே அவளண்டை சேர்ந்து, பிரமிப்படைந்தான். ஏனென்றால் சிறுமி தன் ராணி சாயலாயும் மகா அழகியாகவும் இருப்பதைக் கவனித்தான்.

மங்களவல்லி, "ராக்ஷதனா நீ?" என்றாள்.

ராஜாவுக்குத் தன் குற்றம் ஞாபகத்தில் வந்தது. "நான் ராக்ஷதன் தான்" என்றான்.

"ராக்ஷதா, என்னைக் கொல்லவேண்டாம். என்னை ஆற்றில் தள்ளவேண்டாம். அம்மை அழுவாள்" என்று பரிதாபமாய்ச் சொன்னாள். அவளுக்குப் பதில் பேச அரசனுக்கு நாவு எழவில்லை. அவன் திகைத்து நிற்கும்போதே பெண் ஓடிப்போனாள். அரசன் ராணியிடம் போய் சங்கதி சொன்னான்.

சில வாரங்களாய் மறுமுறை மங்களவல்லியைக் காண விரும்பிக் காடெல்லாம் தேடினார். அவளையாவது அவள் இருப்பிடமாவது அவர்கள் காணவில்லை.

ஒரு நாள் கழுத்தில் மணி கட்டின ஒரு மான் குட்டியைக் கண்டு ராஜா அதைப் பின்

தொடர்ந்து போனார். அது வேடனுடைய குடிசைக்கே போய்ச் சேர்ந்தது.

ரிஷிகளின் உடை தரித்து இருந்த ராஜனைப் பார்த்து வேடன் வணங்கினான். உபசரணை எல்லாம் செய்தான். சற்றுநேரம் பேசிக் கொண் டிருந்தார்கள். மங்களவல்லி ராஜாவின் குழந்தை என்று தெரிய வந்தது.

ராஜாவும் ராணியும் வேடனை வணங்கிக் குழந்தையுடன் தம்முடன் அரண்மனையில் வசிக்கக் கேட்டுக்கொண்டார்கள். வேடன் சம் மதித்து யாவரும் அரண்மனைக்குப்போனார்கள்.

எல்லாரும் சந்தோஷமாய் இருக்கும் நாளில் ராஜகுமாரன் ஒருவன் மங்களவல்லி யைக் கலியாணம் செய்துகொண்டான். இரு வரும் அந்த நாட்டை பிற்காலங்களில் ஆண்டு வந்தார்கள்.

"குறி சொல்லுகிறவர்கள் பேச்சு எப்போ தும் நிஜம் அல்ல."





# 21. கோபக்கார கோபாலன்

கோபால் மகா கோபக்காரன். யாரையும் கோபத்தில் அடித்து விடுவான். அவன் மனம் போல் நடந்து கொள்ளாவிட்டால் எவரையும் ஏசுவான். ஏனென்ருல் பாட்டியாருக்கு அவன் மேல் அதிகப் பிரியம். அம்மை அவனேக் கண்டித்தால் பாட்டியார் சிபார்சு பண்ணவந்து விடுவாள். “சின்ன வயசுதானே அவனுக்கு என்ன தெரிகிறது” என்பாள்.

இது அம்மைக்கு விசனம். நாளடைவில் அவன் பெரிய கோபக்காரன் ஆனுன். தன் காரியம் ஒன்றையே கவனிப்பான். மற்றப்படி, அவன் வாசிப்பில் சமர்த்தன். எந்த வேலையி லும் நிபுணன். வீண்காலம் போக்கும் தன்மை

அவனிடம் இல்லை. எந்தக் காரியத்தையும் யூகித்துக் கண்டறியக் கூடியவன். கோபம் வந்த நாழிகையில் யோசனை சிறிதளவும் இல்லாமல் படபடப்பாய் பேசுவான்.

ஒருநாள் காலையில் தனது கலர் பாக்ஸ் (சாயப்பெட்டி) வைத்த இடத்தில் காணுமல் வீடு எங்கும் தேடினுன். பெட்டி அகப்படவில்லை. வீட்டு சமையல்காரப்பையன் முத்து சாமி தான் எடுத்தான் என்று சந்தேகித்தான்.

முத்து ஒரு ஏழைப்பையன். பொதுவாய் அமைதியாய் இருந்தாலும் சில சமயங்களில் தைரியமாய் நியாயம் பேசுவான். அதனுல் கோபால் அவனைத் துஷ்டன் என்றே மதித்தான். எப்போதும் அவனிடத்தில் கோபமாய் பேசுவான். சாயப் பெட்டியை முத்துவிட மிருந்து உடனே வாங்கவேண்டும் அல்லது அவன் ஏதாவது மோசஞ் செய்வானென்று எண்ணமிட்டு அவனைக் கூப்பிட்டான்.

"அடே, முத்து, வா இங்கே"

"ஸ்வாமி, என்ன வேலை?"

"என்னுடைய சாயப் பெட்டியை எடுத்தாயா?"

"நான் எடுக்கவில்லை. அதை நான் இன்று காணவேயில்லை."

"ஏன் காணவில்லை? வைத்திருந்தால் உடனே கொண்டுவா."

"வைத்திருந்தால் கொடுக்கத் தடையில்லை."

"பொய் சொல்லாதே"

"ஸ்வாமி, நான் பொய் சொல்லவில்லை. நீங்கள் வைத்த இடம் எனக்குத் தெரியாது."

"எதிர்த்துப் பேசுகிறாய், உன்னை அடிப்பேன்."

"என்னை அடித்தாலும் நான் சாயப் பெட்டியைக் கொடுக்க முடியாது."

இதன்பேரில் கோபால் முத்துசாமியைக் காயப்பட அடித்து, ஹிம்சைசெய்தான். முத்துசாமியின் வேட்டி கிழிந்துபோனது. அவனோ கண்ணீர் விடுவது புருஷலக்ஷணம் அல்ல என்று எண்ணி மறுவார்த்தையின்றி சமையல் அறைக்குப் போய்விட்டான்.

ஐந்து மணிக்கு அப்பா வீட்டுக்கு வந்தவுடனே கோபால் அப்பாவிடம் போய், முத்துசாமியை வேலையிலிருந்து தள்ளும்படி சொன்னான். முத்து ஒருதிருடன் என்றும், சண்டைக்காரன் என்றும் குற்றம் சாட்டினான். அப்பாவுடைய முகரூபு மாறிப்போனது. முத்துசாமியைக் கூப்பிட்டு சாயப் பெட்டியை அவன்

எடுத்தானு, எங்கே போட்டான் என்பதாய் திருப்பித் திருப்பி விசாரித்தார். முத்து என்ன செய்வான்.

"எஜமான்களே, நான் இதுவரையில் எவருடைய பொருளையும் களவு செய்யவில்லை. பிச்சைக்காரனுகத் திரிந்த என்னை ஆதரித்த உங்கள் பொருளையா மோசம் பண்ணுவேன்!" என்று அழுதுகொண்டே சொன்னுன். அப்பா கோபாலை வெளியே அனுப்பிவிட்டார். கோபாலிடம் அவர் தனித்துப் பேசின சங்கதியைக் கேட்போம்.

"கோபால்."

"என்ன அப்பா."

"நீ முத்துசாமியை அடித்தாயா?"

"அவன் என் பெட்டியை மோசம் பண்ணினுன்."

"அவன்தான் பெட்டியை எடுத்தான் என்று உனக்குத் தெரியுமா?"

"தெரியாதா? வேறுயார் இங்கே வந்தார்? முத்து கெட்டபையன்......"

"கோபால் யோசித்துப் பேசு......"

அச்சமயம் அவனுடைய தம்பி வேணு "அப்பா, பாரு பாரு, ஆனு (நான்) இந்தா"

என்று சொல்லிக் கொண்டே ஓடிவந்தான். அவன் வலது கையில் இரண்டு சாயக் கட்டிகளும் இடது கையில் ஒரு தூரிகைக் குச்சும் இருந்தது. அவனுடைய வெள்ளை உடுப்பில் பல இடங்களில் சிவப்பு, மஞ்சள், ஊதாசாயம் பட்டிருந்தது. வேணு சற்றுநேரத்தில் பெட்டியும் கொண்டுவந்து சந்தோஷமாய் கொடுத்தான்.

கோபால் முத்துவிடம் மன்னிப்புக் கேட்டு வேஷ்டியும் வாங்கிக் கொடுத்தான்.

கோபால் இதற்குப் பின்பு கோபத்தை விட்டு விட்டான். அப்பா முத்துவை இரவுப் பாடசாலைக்கு அனுப்பிக் கல்வி புகட்டினர்.

---

**வினா :**

1. கோபால் செய்த பிழை என்ன ?
2. சாயப் பெட்டியை எடுத்தது யார் ?
3. மேற்கண்ட கதையை எழுது.
4. இந்தக் கதையால் நீ கற்றுக்கொள்ளும் நீதி என்ன ?





## 22. லலித்தாவின் ஆட்டுக்குட்டி

லலித்தா — அப்பா, அப்பா, இதோ என் ஆட்டுக்குட்டி.

செட்டியார் — இது எது, உன்னுடைய சம்பாத்தியமா?

லலித்தா — அப்பா, நானும் ராஜூவும் ஒரு மாலை நேரம் காவேரிக்கரையில் உலாவப் போனேம். நாங்கள் விளையாடிக்கொண்டு இருக்கும்போது, இடையன் ஒருவன் சினை ஆடு ஒன்றைக் குற்றுயிராய் அங்கே கொண்டுவந்து அதன் கழுத்தை அறுத்து, உடனே வயிற்றைக் கீறி, ஒரு அழகிய குட்டியை வெளியே எடுத்தான். குட்டி உயிரோடு இருந்தது.

சேட்டியார் — ஆட்டுக்கு என்ன நோவு?

லலித்தா — அது சோளப் பயிர் தின்றதாம்.

சேட்டியார் — சரி, அது உன் கைக்கு எப்படி வந்தது?

லலித்தா — நானும் ராஜூவும் சேர்ந்து அதை எட்டு அணுவுக்கு வாங்கினோம். நீங்கள் பம்பாய்க்குப் போகும்பொழுது கொடுத்த அணு என்னிடம் இருந்தது.

சேட்டியார் — நல்ல வியாபாரம். உன் சிறு குட்டி இப்போது ஆடாகிவிட்டது. எப்படி வளர்த்தாய்? என்று சொல்லி மகளைக் கட்டித் தழுவி உச்சி முகந்து முத்தமிட்டார். தன் மனைவியைக் கூப்பிட்டு, "பார்வதி, உன் மகள் வேலையைப் பார்த்தாயா? விதை ஒன்று போடச் சுரை ஒன்று காய்க்குமா?" என்றார்.

பார்வதி அம்மாள் — அவளுக்கு இளக்காரம் கொடுப்பதெல்லாம் நீங்கள் தான். ஆட்டுக்குட்டியைக் கட்டிக்கொண்டு வீட்டில் செய்த வேலைகள் உங்களுக்குத் தெரியுமா? என்றாள்.

சேட்டியார் — அம்மை, எப்படி வளர்த்தாய்?

லலித்தா — பால் ஒரு கெண்டிப் போகணியில் வைத்து, ரப்பர் நிப்பிள் போட்டுக்

கொடுத்தேன். ஆதியில் சிலநாள் அதைக் காலை மாலை இடையனிடம் எடுத்துக் கொண்டு போனேன். அவன் குட்டி சாகக் கொடுத்த ஆடு ஒன்று அதற்குப் பால் கொடுக்கச் செய்தான்.

**செட்டியார்** — ஆடு நல்ல குணத்துடன் பால் கொடுத்ததா ?

**லலித்தா** — இடையன் ஒரு தந்திரம் செய் தான். செத்துப்போன ஒரு குட்டியின் தோலை என்னுடைய ஆட்டுக்குட்டியின் மேல் வைத்துக் கட்டி விடுவான். அப் போது ஆடு ஏமாந்து போகும்.

**செட்டியார்** — குட்டிக்கு என்ன பெயர் வைத் தாய் ?

**லலித்தா** — "வெண்மதி." (இச்சமயம் வெண் மதி அம்ம்ம்மே என்று கத்தி நாலு காலை யும தூக்கிக் குதித்தது.) அப்பா, வெண் மதி, தினமும் என்னேடு பாடசாலைக்கு வருகிறது. மாணுக்கர் யாவரும் அதை நேசிக்கிருர்கள். புல் பிடுங்கிக் கொடுப் பார்கள். அவர்கள் சாப்பிடும் பக்ஷணம் பழத்தோல் எல்லாம் அதற்குக் கருத்தாய் கொண்டுவந்து கொடுப்பார்கள். சில சம யம் சமையல் அறைக்குப் போய் சட்டிக்

குள் தலையை விடுவதும் உண்டு. குழந்தை தானே, அதற்கு என்ன தெரியும்?

பார்வதி அம்மாள் — சரி, சரி குளிக்க வா. அது வீட்டுக்குள் ஈரம் பண்ணுகிற பேச்சு வெளியேவரக் காணோம்" என்று சொல்லி லலித்தாவை அழைத்துக் கொண்டு போய்விட்டாள்.

---

வினா :

1. லலித்தாவின் ஆட்டுக் குட்டி பிறந்த கதை சொல்லு.
2. தாயில்லா ஆட்டுக்குட்டி எப்படி வளர்க்கலாம்?
3. வெண்மதி வளர்ந்த விதம் சொல்லு. பாடசாலைப் பிள்ளைகள் அதை என் நேசித்தார்கள்.
4. உனக்கு ஆட்டுக்குட்டி பிரியமா ? என் ?



## 23. ஒரு ஈயின் கதை

ஒருநாள் வீட்டில் ஈ அதிகமாகத் தொல்லே செய்தது. அன்று மழைநாள். வீடு முழுவதும் பெனுயில் விட்டுக் கழுவும்படி பேசிக்கொண் டார்கள். அங்கே வெகு உல்லாசமாய்ப் பறந்து திரிந்த ஒரு ஈ அதைக்கேட்டுத் துக்கப்பட்டது. சற்றுநேரம் பொறுத்து என்னண்டை வந்து ரகசியமாய் பேசின சங்கதி கேளுங்கள்.

"என்னைக் கொல்லுவீரோ? கொலே செய் வது பாவம்."

"நீ ஓடிப்போ வீட்டுக்குள் வராதே. வந் தால் கொல்லுவோம்."

"நான் என்ன பாவம் செய்தேன். அவ் வளவு கோபமாய் பேசுகிறீர்கள்?"

"நீ அசுத்தமானவன். துணிகரமாய் சாப் பாட்டின்மேல் உட்காருவாய். எந்த வஸ்துவை யும் அசுத்தமாக்குவாய். நினைத்த பொருளின் மேல் முட்டையிடுவாய்."

"ஆஹா, என்ன விசனமான காரியம்! அறியாமல் சிறு ஈ செய்த குற்றத்தைப் பொறுத் துக் கொள்ளுங்கள். நான் இப்பொழுது ஒரு வித்தை பண் ணுகிறேன்."

"என்ன வித்தை உனக்குத் தெரியும்?"

"தலை கீழாய் சுவரில் நடக்கிறேன் பார். மேலும் எவ்வளவு அழகாய் இருக்கிறேன்!"

"நீ எப்படித் தலை கீழாய் நடக்கிறாய்? எனக்கும் அதேமாதிரி நடக்க இஷ்டம்."

"என் காலில் முள்போல் மெல்லிய அணுக்கள் நெருங்கி இருக்கிறது. அதனால் என் கால் சறுக்குவதில்லை."

"மெய்தான், உனக்கு ஆறுகாலும் அழகிய இரண்டு சிறகும் உண்டு. சிறகில் தூசி ஒட்டாமல் பலதடவை நீ துடைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்திருக்கிறேன். என்றாலும் அழுக்கு உனக்குப் பிரியமான ஆகாரம். நான் உன்னை நேசிக்க முடியாது."

"என் கண்ணைப் பார்த்தாயா?"

"பார்த்தேன். உனக்கு ஆறு கண் இருக்கிறது. ஆனால் உன் கழுத்தைத் திருப்ப முடியாதே. அதையும் நினைத்துக்கொள்."

"கழுத்தைக் கண்டபடி திருப்புவது கெட்ட வழக்கம்."

"மெய்தானா? உன் தாயாரை நான் கேட்கட்டுமா?"

"அவள் முட்டையிட்ட உடனே மரித்துப் போனாள்."

"பாவம் ஈ, நீ எப்படி வளர்ந்தாய்?"

"நான் அதைப்பற்றி நினைக்கவே இல்லை. எல்லா ஈக்களும் என்னைப்போலவே தாயின் உதவி இல்லாமல் வளருகின்றன. என் தாய் மிகவும் கெட்டிக்காரி. என்னை அவள் ஒரு மாம்சத்துண்டின்மேல் வைத்தாள். அப்போது நான் முட்டையாய் இருந்தேன். முட்டையி லிருந்து புழுவாய் வெளிப்பட்டேன். அப் போது என் ஆகாரம் பிறந்த இடத்தில் தயா ராய் இருந்தது. நான் பெரிய புழுவான பின்பு என் தேகம் சுருங்கி மேல்தோல் கூடு போலா னது. கூட்டுக்குள் இருந்த எனக்கு சிறகு கால் எல்லாம் முளைத்து நான் கூட்டை விட்டு வெளிப்பட்டேன். எங்கே போனாலும் சாப் பாடு கிடைக்கிறது. எனக்கு என்ன குறை. போய்வருகிறேன். நமஸ்காரம்" என்று சொல்லி ஈ பறந்து போனது.

---

வினா:

1. ஈ எப்படித் தலை கீழாய் நடக்கிறது?
2. தாயில்லா ஈக் குழந்தை எப்படி வளருகிறது?
3. ஈயின் கண் எப்படிப்பட்டது?



## 24. மகா அல்பிரட் அரசர் வாசிக்கப் படித்த கதை

நமது ராஜா வாழும் தேசம் இங்கிலாந்து. ஆயிரம் வருஷங்களுக்கு முன் இங்கிலாந்தில் அல்பிரட் என்ற பெயர் கொண்ட ஒரு நல்ல ராஜா இருந்தார். அல்பிரட் ராஜா சிறுவனாய் இருக்கும்போது, அநேக ஜனங்களுக்குக் கை எழுத்துப் போடவும் தெரியாது. அரசருக்குக் கூட வாசிக்க எழுதத் தெரியாது.

அல்பிரட் சிறுவனாய் இருக்கும்போது அவருக்காவது, அவருடைய மூன்று அண்ணன்மாருக்காவது வாசிக்கத் தெரியாது. அவருடைய தாயார் நல்ல புத்திசாலி. படிக்கத் தெரிந்தவள். அவளிடம் ஒரு அழகிய புஸ்தகம் இருந்தது. அதில் பல நல்ல வருணப் படங்கள் இருந்தன. ராஜகுமாரர் நாலுபேருக்கும் அந்தப் படங்களின்மேல் பிரீதி அதிகம்.

ஒரு நாள் ராணி தன் மக்களை அழைத்து, "தம்பிமாரே, யார் இந்த புஸ்தகத்தை முதலில் வாசிப்பானோ அவனுக்குப் புஸ்தகத்தை இனாமாகக் கொடுப்பேன்" என்றாள்.

முதல் ராஜ குமாரன் பார்த்தான், "இது என்ன தொல்லை. நான் பெரியவன் ஆகும் போது ராஜாவாய் இருப்பேன். வாசித்துப்

படிக்கும் கஷ்டம் எனக்கு வேண்டாம். எனக்கு வாசிப்பு என்னத்திற்கு?" என்றான். ஆகையால் அவன் வாசித்துப் படிக்கவில்லை.

இரண்டாம் மகன், "நான் வாசித்துப் படிக்கமாட்டேன். பெரியவன் ஆகும்போது பட்டாளத்தின் அதிகாரி ஆவேன். அப்போது வாள், ஈட்டி, வேலைப் பிடித்து யுத்தம் செய்வேன். சந்நியாசிகள் படிப்பார்கள்" என்றான்.

மூன்றாம் மகன், "புஸ்தகம் அழகானது. அதில் உள்ள கதைகளும் பாட்டுகளும் எனக்கு மிகப் பிரீதி. ஆனால் அவற்றைப் படிப்பது எவ்வளவு கஷ்டம்! அதற்காகக் கஷ்டப்பட எனக்கு மனதில்லை" என்றான்.

கடைசிக் குழந்தை அல்பிரட், "அம்மா நான் படிக்கிறேன். என்னிடம் புஸ்தகத்தைக் கொடுங்கள்" என்றான்.

மூன்று நாளில் அல்பிரட் புஸ்தகத்தைப் படித்து முடித்து அதிலுள்ள கதைகள் பாட்டுகள் எல்லாம் சொல்லக்கூடியவனானன். தாயார் மகனை முத்தமிட்டு முதுகைத் தடவி, புஸ்தகத்தையும் இனமாகக் கொடுத்தாள்.

அல்பிரட் வளர்ந்து பெரியவன் ஆனபோது இங்கிலாந்தின் ராஜாவானன். ஜனங்கள் அவனை அதிகமாய் நேசித்தார்கள். ஏனென்றால் அல்பிரட் ராஜா தேசத்து ஜனங்களுக்கு

நன்மை செய்தான். பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தினான். நல்ல புஸ்தகங்கள் இங்கிலீஷ் பாஷையில் எழுதினான்.

---

வினா :

1. அல்பிரட் என்பது யார்?
2. அவன் எப்படி வாசிக்கப் பழகினான்?
3. அல்பிரட் என்பவனை ஜனங்கள் ஏன் நினைக்கிறார்கள்?



## 25. காக்காய்க்குக் கலியாணம்

காக்காய்க்கும் காக்காய்க்கும் கலியாணம்
காடுமேடெல்லாம் கொண்டாட்டம்

நாடு நகரில் நாட்டியங்கள்
வீட்டுக்கூரையில் கச்சேரி

மாட்டு முதுகில் ஊர்க்கோலம்
தோட்டித்தெருவில் உண்டாட்டு

நாலு தெருவுக் குப்பையிலே
காலுங்காலும் குதித்துவர

நாலா மூலைக் காக்காய்கள்
பாக்கு வெற்றிலை ஏந்திவர.

மங்களம் சுபமங்களம்
காக்காய்க்குச் சுபமங்களம்.



# 26. ஔவையார்

குழந்தைகளே, நமது நாட்டில் ஔவை யார் என்று ஒரு பெரிய அம்மாள் இருந்தாள். ஔவையார் கல்வியில் சிறந்தவள். எந்த வார்த் தையும் ஞானத்தோடு பேசுவாள். அவள் காலத்தில் இருந்த எல்லா ஞானிகளும் ராஜாக் களும் அவளுக்கு மரியாதை செய்தார்கள்.

சிவபிரானுக்கு இரண்டு பிள்ளைகள் உண்டு. அதில் ஒருவர் பெயர் விநாயகக் கடவுள். அடுத் தவர் முருகக் கடவுள்.

ஒருநாள் ஔவை சில கடிதங்கள் எழுத வேண்டி யிருந்தது. அதுவும் ராஜாக்களுக்கு அனுப்பவேண்டியவை. உடனே விநாயகரைத் துதித்து மண ஓலைகளை எழுதும்படி பிரார்த்தித் தாள். அவர் அப்படியே எழுதினர். அக்காலம் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் மிகச் சொற்பம்.

மற்றொரு சமயம் முருகக் கடவுள் ஔவை யிடம் விளையாட மனங்கொண்டு, ஒரு மாட்டுக் காரப்பையன் வேஷம் பூண்டு நாவல் மரம் ஒன் றில் ஏறிக்கொண்டார். அந்த வழியாக ஔவை யார் தவித்தவராய் வந்தாள். முருகன் விருப் பம்போல் அவளும் நாவல் மரத்தடியில் உட் கார்ந்தாள். மரத்தில் பழம் இருகிறதா என்று நிமிர்ந்து பார்த்தாள். பழம் கொப்புகளில் நிரம்பி யிருந்தது.

மாட்டுக்காரப்பையன் மரத்தில் இருப்பது அதிருஷ்டம்தான் என்று நினைத்தாள். பைய னும் 'பாட்டி, பழம் வேண்டுமா ?' என்றான்.

ஔவை 'அடே அப்பா, நாலு பழம் போடு, பசி காதடைக்கிறது' என்றாள்.

மாட்டுக்காரப் பையன், 'கிழவி, உனக்குச் சுடுபழம் வேண்டுமா, சுடாதபழம் வேண்டுமா, சொல்லு' என்றான். அம்மை ஆலோசனை பண்ணி, கேள்வியின் கருத்து தெரியாமல் "அப்பா சுடாதபழம் நாலுபோடு" என்றாள்.

அவன் மரக்கிளையைப் பலமாய் அசைக் கவே பழம் மணலில் விழுந்து மணல் ஒட்டிக் கொண்டது. ஔவையார் அவற்றைப் பொறு க்கி மணல் நீங்கும்படி ஊதுவதைக் கண்டு, சிறுவன், "பாட்டி பாட்டி, சுடாதபழம் கேட் டாய்; சுடுகிறபழம் எடுப்பது ஏன் ?" என்றான்.

ஔவையார் இதைக்கேட்டு, இந்த மாட்டுக் காரப்பையன் என்னைக் கேலிபண்ணவா ? என்று விசனப்பட்டாள். அப்போது முருகக் கடவுள் தம்முடைய சுயரூபம் காட்டி அவளைச் சந்தோஷப்படுத்தினர்.

ஔவை நல்ல பாட்டுக்கள் எழுதினாள். கல்விமான்களும் அவள் பாடல்களை விரும்பிப் படிக்கிறார்கள். நாமும் கொஞ்சம் படிக்கலாம்.

ஔவையார் அருளிச் செய்த

# ஆத்திசூடி

**நீதி வாக்கியங்கள் :**

ஔவையார் சொன்ன இந்த நீதி வாக்கியங்களை நாம் எப்போதும் நினைப்பது நல்லது. அவற்றில் அவ்வளவு விஷயங்கள் அடங்கி யிருக்கிறது.

## 1. அறஞ்செய விரும்பு

தருமத்தைப் பிரியத்தோடு செய், சலிப்போடு செய்யாதே.

## 2. ஆறுவது சினம்

கோபம் வந்தால் அதை விட்டு சாந்தமாக இரு.

## 3. இயல்வது கரவேல்

கரவேல் - ஒழிக்காதே. நீ யாருக்காவது சகாயம் செய்ய வேண்டியபோது, என்னால் முடியாது என்று சொல்லவேண்டாம். கூடிய உதவி தடையின்றிச் செய்.

## 4. ஈவது விலக்கேல்

ஒருவர் தருமம் செய்தால் அதைத் தடை செய்யாதே.

## 5. ஊக்கமது கைவிடேல்

எந்த வேலை செய்தாலும் ஆவலோடு செய். கஷ்டம் வந்தாலும் வேலையை விட்டுவிடாதே.

## 6. எண்ணெழுத் திகழேல்

எண் - கணக்குப் பாடம், எழுத்து வாசகப் பாடம், பொது அருத்தம் கல்வி : எந்தக் காரணத்தினு னும் கல்வி எனக்கு எதற்கு என்று சொல்லாதே.

## 7. ஏற்ப திகழ்ச்சி

பிறரிடம் கேட்டு எதையும் வாங்குவது இழிவு. (நாமே முயற்சி செய்து சுகமாய் வாழ்வது மேன்மை.)

## 8. ஓதுவ தொழியேல்

ஓதுவது - கல்வி கற்பதையும், போதிப்பதையும், ஒழியேல் - நீ விட்டுவிடாதே. கல்வி கற்று மற்றவர் களுக்குச் சொல்லவேண்டும்.

## 9. ஔவியம் பேசேல்

ஔவியம் - பொறாமையான பேச்சு. பொறாமை சுகத்தையும் இன்பத்தையும் கெடுக்கும்.

## 10. கண்டொன்று சொல்லேல்

இக்கவிக்கு இரண்டு அருத்தம். ஒன்று கோள் சொல்லித் திரியாதே. மற்றது பொய் சாட்சி சொல் லாதே. கண்டதை மறைக்காமல் உள்ளபடி சொல்லு.

## 11. குணமது கைவிடேல்

குணமது - நல்ல காரியம். எந்த நல்ல காரியத் தையும் விட்டுவிடாதே.

## 12. கெடுப்ப தொழி

ஒழி - முழுவதும் விட்டு விலகு. தீமை செய்கிற எண்ணம் உன் மனதில் வரவேண்டாம்.

## 13. கேள்வி முயல்

கேள்வி, கல்வி; முயல் - பிரயாசத்தோடு கற்றுக் கொள்.

## 14. சான்றோ ரினத்திரு

சான்றோர் - நல்ல குணசாலிகள்; இனத்தில் - கூட்டத்தில்; நல்லவரோடு சிநேகமாய் இரு.

## 15. சூது விரும்பேல்

சூது விளையாட்டு - பணம் பந்தயம் வைத்து விளையாடும் ஆட்டம். விரும்பேல் - பிரியப்படாதே.

## 16. செய்வன திருந்தச்செய்

எந்த வேலை செய்தாலும் நேர்த்தியாய் செய்.

## 17. சேரிட மறிந்துசேர்

சேரிடம் அறிந்து - உறவு கொள்ளும் ஜனங்கள் நல்லவர்களா, அறிவுள்ளவர்களா என்று விசாரித்து, சேர் - சேர்ந்துகொள். (சிநேகம் செய்.)

## 18. சோம்பித் திரியேல்

சோம்பல் அநேக துன்பங்களைக் கொடுக்கும். அதனால் சோம்பலாய் நேரம் செலவிடவேண்டாம்.

## 19. தந்தை தாய்பேண்

தகப்பனாரையும் தாயாரையும் அன்புடன் நேசித்து அவரைக் கனப்படுத்தவேண்டும்.

## 20. தீவினை அகற்று

கெட்ட செயல்களை நீக்கிவிடு.



# நறுந்தொகை

இது இனிய சத்தியங்கள் அடங்கிய நூல். கவனமாய் படித்தால் கருத்தை எளிதில் தெரிந்துகொள்ளலாம்.

**1. எழுத் தறிவித்தவன் இறைவ னாகும்**

கல்வி கற்றுக்கொடுத்தவன் நமக்குக் கண், கை, கால் கொடுத்த கடவுளுக்கு ஒப்பாயிருக்கிறான்.

**2. கல்விக் கழகு கசடற மொழிதல்**

திருத்தமான உச்சரிப்புடனும், கருத்துப் பிசகாமலும் பேசுவது கல்வியால் அடையும் பலன்.

**3. செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்**

கையில் பணமும் பொருளும் உள்ளவன் எளியவர்களான தன் இனத்தாருக்கு உதவிசெய்வது மேன்மை.

**4. உண்டிக் கழகு விருந்தோ டுண்டல்**

விருந்தினரோடு சாப்பிடுவது அழகு.

**5. அறிவோர்க் கழகு கற்றுணர்ந் தடங்கல்**

கல்வி அறிவுள்ளவன் பெருமை பேசக்கூடாது. அது அழகல்ல. உணர்ந்து - ஆராய்ந்து அடங்கல் - தாழ்ந்த சிந்தையுடன் நடந்துகொள்ளல்.

**6. வறியோர்க் கழகு வறுமையிற் செம்மை**

தரித்திரம் வந்துவிட்டால், அப்போது தனக்குள்ளதைக் கொண்டு சிக்கனமாய் செலவு செய்து சுகமாய் இருக்கவேண்டும். அதுவே சிறப்பு.

7. தேம்படு பனையின் திரள்பழத் தொருவிதை
வானுற ஓங்கி வளம்பெற வளரினும்
ஒருவர்க்கிருக்க நிழலாகாதே.

8. தெள்ளிய ஆலின் சிறுபழத் தொருவிதை
தெண்ணீர் கயத்துச் சிறுமீன் சினையினும்
நுண்ணிதே யாயினும் அண்ணல் யானை
அணிதேர் புரவி யாட்பெரும் படையொடு
மன்னர்க்கிருக்க நிழலாகும்மே.

பனையின் விதை பெரியதாய் இருந்தாலும் நிழல் கொடுக்கும் மரம் அதிலிருந்து உண்டாவதில்லை. கடுகினும் பலமடங்கு சிறிய ஆலம் விதையிலிருந்து மிகப் பெரிய மரம் உண்டாகிறது. அப்படியே பார்வைக்குச் சிலர் பெரியவர்களாய் இருந்தாலும் வேலையில் கெட்டிக்காரர் அல்லர். அணிதேர் - அலங்காரமான தேர்; புரவி - குதிரை; ஆட்பெரும்படை - பெரிய சேனை; யானைப்படை, குதிரைப் பட்டாளம், தேர் பட்டாளம், காலாட்படை ஆக நாலுவகைச் சேனைகள்.

9. சிறியோ ரெல்லாம் சிறியரு மல்லர்
பெரியோ ரெல்லாம் பெரியரு மல்லர்
பெற்றோ ரெல்லாம் பிள்ளைக ளல்லர்
உற்றோ ரெல்லாம் உறவின ரல்லர்.

உற்றோர் - பந்துக்கள்; உறவினர் - நேசிக்கிறவர்கள்.

10. அரைக்கினுஞ் சந்தனம் தன்மண மாறாது
கலக்கினுந் தண்கடல் சேறாகாது.

மேலான குணமுள்ளவர்கள் எவ்வளவு துன்பம் வந்தாலும் தம் குணம் மாறமாட்டார்கள், தண்கடல் - குளிர்ந்த கடல்.